# சேக்கிழாரும் இசைத்தமிழும்

முனைவர் ம.அ. பாகீரதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி, சென்னை - 600 113.

# சேக்கிழாரும் இசைத்தமிழும்

முனைவர் ம.அ. பாகீரதி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி, சென்னை 600 113

டாக்டர் ஜெ ஜெயலலிதா அறக்கட்டளைச் சொற்பொழிவு

வரிசை எண் : 3

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Cēkkiḻārum icaittamiḻum |
| Author | : | Dr. M.A. Bhageerathi<br>Associate Professor, Dept. of Music<br>Queen Mary's College, Chennai - 600 004. |
| General Editor | : | Dr. K. Chidambaram<br>Senior Research Fellow<br>Faculty of Overseas Tamils<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Tharamani, Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 731 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2011 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x + 102 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.50/- (Rupees Fifty only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>No. 47(Old No.20)<br>Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026 |
| Subject | : | Tamil Music |


---

முனைவர் கா.மு.சேகர்
இயக்குநர் (மு.கூ.பொ.)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை – 600 113

## அணிந்துரை

உலகின் ஆதி இசையாகத் திகழ்வது தமிழ் இசை. மேற்கத்திய இசை, வட இந்திய இசை, கர்னாடக இசை ஆகிய அனைத்து இசைகளுக்கும் அடிப்படையாகத் திகழ்வது தமிழ் இசை. சேக்கிழார் அருளிய பெரிய புராணம் தமிழ் இசைக்கு ஒரு களஞ்சியமாகத் திகழ்கிறது எனலாம்.

பழந்தமிழகத்தில் இசை முக்கிய இடத்தைப் பெற்றிருந்தது என்பதை அறிகிறோம். இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழில் இசைத்தமிழ் மைய இடத்தைப் பெற்றுள்ளது. பழந்தமிழ் இலக்கியங்களைத் தொட்டடுத்துத் தோன்றிய தேவார, திருமுறைகள் மற்றும் காவிய, புராணங்களில் பழந்தமிழ் இசை பன்முகமாகப் பிரிந்து பயன்படுத்தப்பட்டது. இந்நிலையில் பெரிய புராண ஆசிரியர் சேக்கிழாரும் இசைத்தமிழைத் தம் புராணத்தில் எடுத்தியம்புகிறார்.

தமிழ் இசைக் கடலாகத் திகழ்கின்ற பெரிய புராணம் தமிழ்ப் பக்தி இலக்கியங்களில் போற்றுதற்குரிய நூலாகத் திகழ்கிறது. அந்நூலைப் பற்றிய இசை ஆய்வாக, **"சேக்கிழாரும் இசைத் தமிழும்"** எனும் தலைப்பில் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் டாக்டர் ஜெ ஜெயலலிதா அவர்களின் பெயரில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் அமைந்த அறக்கட்டளைப் பொழிவாக முனைவர் ம.அ. பாகீரதி (இணைப்பேராசிரியர், இசைத்துறை, இராணிமேரி கல்லூரி) அவர்கள் வழங்கியுள்ளார். இசைத்துறையில் இருபத்தைந்து ஆண்டுகள் பணியாற்றி வருகின்ற பேரனுபவமிக்க பேராசிரியர் இவர். ஏராளமான இசை நிகழ்ச்சிகளை நிகழ்த்தியவர். தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களின் முன்னிலையில் நடந்த மகாத்மா காந்தி ஜெயந்தி வழிபாட்டுக் கூட்ட நிகழ்ச்சியை நடத்தியவர். தமிழ் இசை குறித்த ஆய்வுகளுக்கு நெறியாளராகப் பணியாற்றி வருபவர். இவரது வழிகாட்டலில் ஏழுபேர் இசைத் துறையில் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களின் பெயரால் நிறுவப்பட்ட இவ்வறக்கட்டளையின் மூன்றாவது பொழிவாக, தமிழ் இசைக் களஞ்சியமாகக் திகழும் சேக்கிழார் அருளிய பெரிய புராணம் குறித்த பொழிவு அமைவது பொருத்தமான ஒன்றாகும். இப்பொழிவு நூல் தமிழ் இசை குறித்து நடைபெறுகின்ற ஆய்வுகளுக்கு உறுதுணையாக அமையும் என்பது கூடுதல் சிறப்பாகவும் உள்ளது. நூலாசிரியருக்கு எனது பாராட்டுக்கள்.

இவ்வறக்கட்டளைப் பொறுப்பாளரான இந்நிறுவன முதுநிலை ஆராய்ச்சியாளர் முனைவர் கு.சிதம்பரம் அவர்களுக்கும் எனது பாராட்டுக்கள்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக் கல்வி, தொல்லியல், விளையாட்டு மற்றும் இளைஞர் நலன், தமிழ் ஆட்சிமொழி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சர் மாண்புமிகு என்.ஆர். சிவபதி அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை செயலாளர், முனைவர் மூ. இராசாராம், இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர் மற்றும் இந்நூலின் எழுத்துருவை மெய்ப்புத்திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், கணிப்பொறியாளர் திருமதி பா. கௌசல்யா ஆகியோருக்கும் என் நன்றிகள். இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீ வெங்கடேசுவரா ஆப்செட் அச்சகத்தாருக்கு என் பாராட்டுகள்.

இயக்குநர்

# முன்னுரை

தமிழில் பன்னிரு திருமுறைகள் அமைந்துள்ளன. முதல் மூன்றும் ஞானசம்பந்தப் பெருமான் அருளியவை. நான்கும், ஐந்தும், ஆறும் அப்பர் திருவாக்கு. ஏழாம் திருமுறை வன்தொண்டர் அருளியது. திருவாசகமும், திருக்கோவையாரும் எட்டாம் திருமுறையைச் சார்ந்தவை. அவற்றை அருளியவர் மாணிக்கவாசகர் பெருமான் ஆவார். திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் ஒன்பதாம் திருமுறையைச் சார்ந்தவை. திருமூலரின் திருமந்திரம் பத்தாம் திருமுறையைச் சார்ந்ததாகும். திருஆலவாயர் முதலானோர் அருளியவை பதினோராம் திருமுறையாகத் திகழ்கின்றன. சேக்கிழார் பெருமான் எழுதிய தொண்டர்களின் வரலாற்றை உள்ளடக்கிய பெரியபுராணம் பன்னிரண்டாம் திருமுறை ஆகும்.

திருமுறைகள் அனைத்துமே இசை மற்றும் இசை பற்றிய செய்திகளை உள்ளடக்கியவை ஆகும். இவற்றில் பன்னிரண்டாம் திருமுறையாகத் திகழும் சேக்கிழாரின் பெரியபுராணத்தில் நான் கொண்ட மிகுந்த ஈடுபாட்டால், அந்நூலிலுள்ள இசைக்குறிப்புகளை ஆய்வு செய்து ''சேக்கிழாரும் இசைத்தமிழும்'' என்ற தலைப்பின் கீழ் நூலாக எழுதியுள்ளேன்.

இந்நூலில் பண்பற்றிய செய்திகள் மற்றும் இசைக்கருவிகளைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. பண் பற்றிய செய்திகளில் நமக்குப் பல அரிய செய்திகள் சேக்கிழார் பெருமான் வழங்கியுள்ளார். எடுத்துக்காட்டாக, செந்துருத்திப் பண்ணைப் பற்றிய குறிப்பினைக் கூறலாம். நமக்கு இன்றுவரை கிடைத்துள்ள தேவாரப்பாடல்களில் சுந்தரமூர்த்தி நாயன்மாரின் பாடல்களில் செந்துருத்திப் பண் காணப்படுகிறது. ஆனால் சேக்கிழாரின் பாடல்களில் சம்பந்தப் பெருமான் செந்துருத்திட் பண்ணில் பாடினார் என்ற குறிப்பு நமக்குக் கிடைக்கிறது. எனவே சம்பந்தர் இயற்றிய அனைத்துத் தேவாரப் பாடல்களும் நமக்குக் கிடைக்கப்பெறவில்லை என்பதனை அறுதியிட்டுக் கூறலாம்.

இசைக்கருவிகளைப் பற்றிய பல செய்திகள் நமக்குப் பெரிய புராணத்தில் கிடைக்கின்றன. குறிப்பாகக் 'குழல்' என்ற இசைக்கருவியினை எவ்வாறு செய்யவேண்டும் என்பது பற்றியும் அதனை எவ்வாறு கையாள வேண்டும் என்பது குறித்தும் ஆனாய நாயனார் வரலாற்றைக் கூறும்போது சேக்கிழார் ஆழமாக எடுத்து இயம்பியுள்ளார். அதேபோல் திருநீலகண்ட யாழ்ப்பாணரின் வரலாற்றினை எடுத்துரைக்கும் பகுதியில் 'யாழ்' என்ற இசைக்கருவியினை இசைக்கும் முறை பற்றி விரிவாக எடுத்துரைக்கிறார்.

துடி, முரசு போன்ற முழவுக் கருவிகளையும் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். சங்கம் முதலிய காற்றுக் கருவிகளைப் பற்றிய செய்திகளை நாம் சேக்கிழார் பெருமானின் பாடல்களில் காணலாம்.

மேற்கூறிய செய்திகளை ஆய்வு செய்து இந்நூலில் வழங்கியுள்ளேன். இதனை மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் ஜெ. ஜெயலலிதா அவர்கள் பெயரில் வழங்கும் அறக்கட்டளைப் பொழிவாக வழங்குவதற்கு வாய்ப்பினை நல்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் **இயக்குநர் (மு.கூ.பொ.) முனைவர் கா.மு. சேகர்** அவர்களுக்கும், இவ்வறக்கட்டளைப் பொறுப்பாளரான இந்நிறுவன முதுநிலை ஆராய்ச்சியாளர் முனைவர் கு. சிதம்பரம் அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்பொழிவிற்கு எனக்கு உதவிய எனது கணவர் டாக்டர் கனகசபேசன், எனது மகள்கள் திருமதி ஹரிணி, செல்வி ஹேமமாலினி மற்றும் எனது மருமகன் திருஸ்ரீவத்சா சக்ரவர்த்தி ஆகியோருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனது பொழிவினைச் சேக்கிழாரின் திருப்பாதங்களில் சமர்ப்பிக்கிறேன்.

**ம.அ. பாகீரதி**

## ஆசிரியர் குறிப்பு



முனைவர் ம.அ. பாகீரதி எம்.காம்., எம்.பில்(வணிகவியல்), எம்.ஏ.(இசை), எம்.பில், பிஎச்.டி. அவர்கள் தற்போது சென்னை இராணிமேரி கல்லூரியில் இசைத்துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். 1984இல் அரசுப் பணியில் சேர்ந்த இவர், கடந்த இருபத்து எட்டு ஆண்டுகளாகத் தொடர்ந்து பணியாற்றி வருகிறார்.

பாரம்பரியம் மிகுந்த பரூர் இசைக் குடும்பத்தைச் சேர்ந்த பாகீரதி தமது சிறு வயதிலிருந்தே இசையை முறையாகக் கற்றவர்.

இவரது தந்தையார் வயலின் மாமேதை திரு எம்.எஸ்.அனந்தராமன் ஆவார். இவரது பாட்டனார் பிரபல சுதந்திரப் போராட்டத் தியாகியான தெய்வத்திரு கிட்டாசாமி அய்யர். இவரது பெரியப்பாவான திருசங்கு சுப்பிரமணிய அய்யர் மகாகவி பாரதியாரின் பாடல்களை முதன்முதலில் அச்சிட்டு வெளியிட்டவர். பாகீரதியின் கணவர் முனைவர் கனகசபேசன் ஒரு பொருளாதார நிபுணர். இவர்களுக்கு ஹரிணி மற்றும் ஹேமமாலினி ஆகிய பெண் குழந்தைகள் உள்ளனர். இவ் இரு பெண் மக்களுமே இசையில் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள்.

முனைவர் பாகீரதி அவர்கள் தென்னக இசையில் நன்கு தேர்ச்சி பெற்றவர். இவர் தென்னக இசையினைத் தமது தந்தையிடம் மட்டுமல்லாது முனைவர் வி.வி.ஸ்ரீவத்சா, திருமதி வித்யா ஷங்கர், பரூர் வெங்கட்ராமன், பத்தமடை கிருஷ்ணன், லக்ஷ்மன்தாஸ் ராவ் ஆகியோரிடமும் பயின்றுள்ளார். தேவாரம் முதலிய தமிழிசை மரபுகளைக் கபாலி ஓதுவாரிடம் கற்றுத் தேர்ந்துள்ளார். இவர் வானொலி மற்றும் தொலைக்காட்சிகளில் இசை நிகழ்ச்சிகள் வழங்கியுள்ளார். பல்வேறு பொது மேடைகளிலும் இசை நிகழ்ச்சிகள் வழங்கி உள்ளார். இவரது இசை நிகழ்ச்சிகள் மற்றும் செயல்முறை விளக்கங்கள் ஆகியவற்றைப்பற்றிய விமரிசனங்கள் தினமணி, தினமலர், இந்து ஆகிய நாளிதழ்களில் புகைப்படங்களுடன் வெளிவந்துள்ளன. இவர் சென்னைத் தமிழிசைச் சங்கத்தில் கடந்த இருபது ஆண்டுகளாகப் பண் ஆராய்ச்சி செய்து வருகிறார்.

முனைவர் பாகீரதி அவர்கள் இதுவரை ஏழு மாணவியர்கள் முனைவர் பட்டம் பெறுவதற்கு வழிகாட்டியாக இருந்துள்ளார்கள்.

# பொருளடக்கம்

# சேக்கிழாரின் இசைத்தமிழ் ஓர்–அறிமுகம்

தமிழில் திருமுறைகள் பன்னிரண்டாகும். முதல் மூன்று திருமுறைகள் ஞானசம்பந்தப் பெருமான் அருளியவை. நான்கும் ஐந்தும் ஆறும் நாவுக்கரசர் என்கிற அப்பர் பிரானின் அருள் வாக்குகளாகும். ஏழாம் திருமுறை வன்தொண்டர் என அழைக்கப்படும் சுந்தரருடையது ஆகும். மாணிக்க வாசகப் பெருமான் இயற்றிய **திருவாசகமும் திருக்கோவையும்** எட்டாம் திருமுறையைச் சாரும். திருமாளிகைத் தேவர் உள்ளிட்ட ஒன்பதின்மார் அருளிய **திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும்** ஒன்பதாம் திருமுறையைச் சேர்ந்தவை ஆகும். திருமூலர் எழுதிய **திருமந்திரம்** பத்தாவது திருமுறையைச் சேர்ந்தது. திருவாலவாயர் உள்ளிட்ட பன்னிருவர் அருளிய நாற்பது பாடல்களைக் கொண்டது பதினோராம் திருமுறை ஆகும். சேக்கிழார் எழுதிய **பெரியபுராணம்** பன்னிரண்டாம் திருமுறையைச் சேர்ந்ததாகும். தமிழில் உள்ள இப்பன்னிரு திருமுறைகளும் ஓம் காரத்தின் பரிணாமம் என்றே கருதப்படுகின்றன. இவற்றில் பன்னிரண்டாவது திருமுறையான **திருத்தொண்டர் புராணத்தில்** உள்ள இசைக் குறிப்புகள் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

திருமுறைகளில் பன்னிரண்டாம் திருமுறை சேக்கிழார் அருளியது. அத்திருமறை **பெரியபுராணம்** என்றும் **திருத்தொண்டர் புராணம்** என்றும் வெவ்வேறு பெயர்களால் வழங்கப்பட்டு 0வருகிறது. **பெரியபுராணத்திலுள்ள** இசைக் குறிப்புகளைப் பற்றிய செய்திகளைப் பார்க்கும் முன் சேக்கிழார் பெருமானின் வாழ்க்கை வரலாற்றைச் சிறிது பார்ப்போம்.

## ஆசிரியர் வரலாறு

சென்னையை அடுத்த குன்றத்தூரில் வேளாள மரபில் சேக்கிழார் பிறந்தார். சேக்கிழார் காலத்தைப் பற்றி ஆய்வாளர்களுக்குள் கருத்து வேற்றுமை உண்டு. சிலர் பதினோராம் நூற்றாண்டின் தொடக்கம் என்றும் இன்னும் சிலர் பன்னிரண்டாம் நூற்றாண்டின் நடு என்றும் கூறுவர். ஆனால் ஆய்வாளர்கள் இதுகாறும் சேக்கிழார் காலத்தினை அறுதியிட்டுக் கூறவில்லை.

சேக்கிழார் இயற்பெயர் அருண் மொழித்தேவர். இவருக்குப் பாலறாவாயர் என்றொரு இளவலுண்டு. சேக்கிழார் இளமையிலேயே மதிநுட்பத்துடன் மிகுந்த இறைப் பக்தி உடையவராயும் இருந்தார். இதனால் கும்பகோணம் திருநாகேசுவரத்துப் பெருமான் மீது அளவில்லாத அன்பு பூண்டு ஒழுகி, அப்பெருமானின் நினைவாகத் தாம் பிறந்த குன்றத்தூரிலும் திருநாகேசுவரத்துப் பெருமானை வழிபடலாயினர். இவரது காலத்தில் வாழ்ந்த இரண்டாம் குலோத்துங்க சோழன் இவரை முதலமைச்சராக ஏற்றுக் கொண்டு இவருக்கு **"உத்தமச் சோழ பல்லவன்"**, என்ற பட்டம் கொடுத்துச் சிறப்பித்தான். இதனால் இச்சோழ அரசனை "அநபாயர்" என்று சேக்கிழார் அழைக்கின்றார். "அநபாயர்" என்று அழைக்கப்படும் குலோத்துங்க சோழன் **சீவக சிந்தாமணியின்** மீது பெரிதும் ஈடுபாடு கொண்டவன். சேக்கிழார் அவனிடம், இதுபோன்ற நூல்கள் யாதும் பயன்தரா என்று கூறி, ஈசன் ஒருவனே எப்பொருளையும் உருவாக்கமுடியும் என்றும் அவனை அடைவதற்குரிய நெறி சிவபெருமானையும் அவனுடைய அடியவர்களையும் வழிபடுதலே என்றும் அங்ஙனம் வழிபட்டு உயர்ந்தோர் பலர் என்றும் எடுத்துரைத்துச் சோழ அரசனை நெறிப்படுத்தினார்.

சுந்தரப் பெருமானின் திருத்தொண்டினையும் நம்பியாண்டார் நம்பிகளின் புகழினைப் பற்றியும் விரிவாக எடுத்துக் கூறினார். சேக்கிழாரின் கூற்றினை ஏற்ற அரசன், அவரைத் தொண்டர்களின் வரலாற்றினை எடுத்துரைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். மன்னனின் வேண்டுகோளுக்கு இணங்கி, தில்லைக்குச் சென்று நடராசப் பெருமானை வழிபடும் போது இறைவன் அவருக்கு **"உலகெலாம்"** என அடியெடுத்துக் கொடுத்தார். மேலும் சேக்கிழாரைத் தமது பாதச் சிலப்பொலியைக் கேட்கச் செய்தார். அதன் பிறகு **"திருத்தொண்டர் புராணம்"**, என்னும் அரிய நூல் உருவாயிற்று. இந்நூல் சுந்தரர் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்டுள்ளது. அவருடன் பரவையர், சங்கிலியார் பற்றிய வரலாறும் கூறப்பட்டுள்ளது. மேலும் இந்நூல், இம்மூவரும் கைலாயத்திலிருந்து இம்மண்ணுலகத்திற்கு வந்து அவதரித்த காரணத்தினையும், இறைவன் தடுத்தாட் கொண்ட வரலாற்றையும் கூறி, சுந்தரர் அருளிய திருத்தொண்டர் தொகையிலுள்ள அடியவர்களின் வரலாற்றினை, பதினொரு சருக்கங்களாக வகுத்துப் பின்னர் அவர் திரும்பக் கயிலைக்குச் சென்றதை இறுதியாக வைத்து, நிறைவு செய்யப்பட்டுள்ளது. இந்நூலினைப் பற்றிக் கேள்வியுற்ற அநபாயர் தில்லைக்குச் சென்று சேக்கிழாரையும் அவர் எழுதிய நூலையும் யானை மீது ஏற்றித்

தாமே கவரி வீசி, தில்லை நகரில் பவனிவரச் செய்தார். இது காரணமாகச் சேக்கிழாருக்குத் "தொண்டர் சீர் பரவுவார்" என்ற பட்டம் கொடுக்கப்பட்டது. பிறகு சேக்கிழார் பெருமான் தில்லையிலேயே தங்கிச் சிவத்தொண்டு செய்து வாழ்ந்தார். பல்லாண்டுகள் ஈசனின் மலர்ச் சிலம்படியில் வாழ்ந்த சேக்கிழார், சிவானந்த ஞான வடிவாகி அண்ணலார் சேவடிக் கீழ் எழுந்தருளும் பெருவாழ்வு பெற்றார். இதன் பிறகு அவரின் இளவல் அரச பணியினைத் தொடர்ந்தார்.

**நூல் சிறப்பு**

**பெரிய புராணத்திற்கு** மூலநூல் வன்தொண்டப் பெருமான் அருளிய **திருத்தொண்டத் தொகை** ஆகும். இதற்கு வழி நூல் நம்பியாண்டார் நம்பிகள் அருளிய **திருத்தொண்டர் திருவந்தாதி.** இச்செய்தியினைத் திருமலைச் சிறப்புக் கூறுமிடத்துக் காணலாம்.

**அந்த மெய்ப் பதிகத்து அடியார்களை**
**நந்தம்நாதன் ஆம் நம்பியாண்டார் நம்பி**
**புந்தி ஆரப் புகன்ற வகையினால்**
**வந்த வாறு வழாமல் இயம்புவாம்**

என்பது அச்சருக்கப் பாடல் ஆகும்.

இதில் மொத்தம் 4286 செய்யுள்கள் உள்ளன. இவற்றில் 1255 பாடல்கள் ஞானசம்பந்தருடைய வரலாற்றை விளக்குகின்றன. ஞானசம்பந்தர் தமிழுக்கும், தமிழ்நாட்டிற்கும், தமிழ் மொழிக்கும், சைவத்திற்கும், சிவவழிபாட்டிற்கும் செய்த பேருபகாரத்தைக் கருதி, புராணத்தில் நான்கில் ஒரு பாகத்தினைச் சேக்கிழார் அவருக்கே ஒதுக்கிவிட்டார் என்று அறிய முடிகிறது. ஞானசம்பந்தரைப் பிள்ளை என்று குறிப்பிட்டுப் **பிள்ளை பாதி புராணம் பாதி** என்று பிற்காலத்திலே பழமொழி கூறப்பட்டது, இதனால்தான் என்று அறியமுடிகிறது.

உலகம், உயிர், கடவுள் இம்மூன்றும் ஒருங்கே அமைந்த காவியம் **பெரியபுராணம்** ஆகும். சேக்கிழாரின் அன்பின் உள்ளமாகிய ஊற்றில் தோன்றிய கடல் **பெரியபுராணம்** என்று கூறலாம். **பெரியபுராணம்** சரித்திரத்தையும் பௌராணிகத்தை நுழைத்தும் எழுதப்பட்ட நூல் ஆகும்.

**"பத்திச்சுவை நனி சொட்டச் சொட்ட பாடிய கவி வலவ"** என்று சேக்கிழாரை மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை புகழ்கிறார். **பெரிய புராணத்தின்** வருணனைகள், அதன்

சிறப்பிற்கு மற்றொரு காரணம் என்று சொல்லாம். வருணனையோடு பல பொருள்களும் அமைந்திருக்கின்றன. அவை பாட்டு, ஓவியம், கலை, அரசியல், வாணிபம், தொழில், உழவு, பெண்மை, ஆண்மை, காதல், வண்மை, வீரம், தியாகம், ஆத்மசாந்தி, தத்துவம், பொதுமை, சீர்திருத்தம், புரட்சி, சரித்திரம், பௌராணிகம் போன்றவைகளாகும்.

**பெரிய புராணத்தின்** ஒரு பகுதியை முதன் முதலில் அச்சில் பதிப்பித்தவர் மழவை மகாலிங்க ஐயர். அப்பதிப்பு வெளிவந்த ஆண்டு 1843. காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் **பெரியபுராணப்** பதிப்பில் இருமுறை ஈடுபட்டார். அவை முறையே 1857ஆம் ஆண்டிலும் 1870ஆம் ஆண்டிலும் நிகழ்ந்தன. சிதம்பரம் உபாத்தியாயர் பே. இராமலிங்கம் பிள்ளைப் பதிப்பு 1879ஆம் ஆண்டில் வெளியாயிற்று. ஆறுமுக நாவலர் முதற்பதிப்பு 1884ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. இவர்கள் ஒவ்வொருவரும் அவ்வப்போது தனித்தனியே ஓலை ஏடுகளை ஆய்ந்து புராணத்தினைப் பதிப்பித்தனர். இவர்களது பதிப்புக்களைத் தழுவிப் பின்னர் வேறு சில பதிப்புகள் வெளிவந்தன. **பெரிய புராணத்திற்கு** முதன்முதலில் பொழிப்புரை எழுதியவர் மழவை மகாலிங்க ஐயர் ஆவார். அவ்வுரை முற்றுப்பெறவில்லை. திருவண்ணாமலை ஆதினம் ஏறக்குறைய முக்காற் பகுதிக்குப் பதவுரை இயற்றினார். அதனை இராமலிங்க சுவாமிகள் முற்றுவித்தார்கள்.

தற்காலத்தில் திரு. வி. கல்யாண சுந்தரனார் மற்றும் பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் ஆகியோர் உரை எழுதி உள்ளனர்.

இந்நூலில் 63 நாயன்மார்கள் மற்றும் தொகை அடியார்களின் வரலாறு கூறப்பட்டுள்ளது. இதனை ம. பாலசுப்பிரமணிய முதலியார் பின்வரும் செய்யுளில் மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

**பேயன்ன புறச் சமயப் பிணக்கு நூல்**
**வழியனைத்தும் பிழையே யன்றி**
**வாயன்மை தெளிந்து சைவ சிந்தாந்த**
**வழி தேறி அதீத வாழ்விற்**
**போயண் அஞ்செழுத்தும் திருநீறும் கண்டிகையும்**
**பொருளாக் கொண்ட**
**நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும்**
**பெரும் பேறு நான் பெற்றேனால்**

**பெரியபுராணத்தில்** குறிப்பிடப்பட்டுள்ள 63 நாயன்மார்கள் பெயர் பின்வருமாறு:

1) அதிபத்த நாயனார்
2) அப்பூதி அடிகள்
3) அமர்நீதி நாயனார்
4) அரிவாட்டாய நாயனார்
5) ஆனாய நாயனார்
6) இசை ஞானியார்
7) இடங்கழி நாயனார்
8) இயற்பகை நாயனார்
9) இளையான்குடிமாற நாயனார்
10) உருத்திர பசுபதி நாயனார்
11) எறிபத்த நாயனார்
12) ஏயர்கோன்கலிக்காம நாயனார்
13) ஏனாதிநாதநாயனார்
14) ஐயடிகள்காடவர்கோன் நாயனார்
15) கணநாத நாயனார்
16) கணம்புல்ல நாயனார்
17) கண்ணப்ப நாயனார்
18) கலிக்கம்ப நாயனார்
19) கலிய நாயனார்
20) கழறிற்றறிவார் நாயனார்
21) கழற்சிங்க நாயனார்
22) காரி நாயனார்
23) காரைக்காலம்மையார்
24) குங்குலியக் கலய நாயனார்
25) குலச்சிறை நாயனார்
26) கூற்றுவ நாயனார்
27) கோச்செங்கட்சோழ நாயனார்
28) கோட்புலி நாயனார்
29) சடைய நாயனார்
30) சண்டேசுர நாயனார்
31) சத்தி நாயனார்
32) சாக்கிய நாயனார்
33) சிறப்புலி நாயனார்
34) சிறுத்தொண்ட நாயனார்
35) சுந்தர மூர்த்தி சுவாமிகள்
36) செருத்துணை நாயனார்
37) சோமாசி மாற நாயனார்
38) தண்டியடிகள் நாயனார்
39) திருக்குறிப்புத்தொண்ட நாயனார்
40) திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள்
41) திருநாவுக்கரசு சுவாமிகள்
42) திருநாளைப் போவார் நாயனார்
43) திருநீலகண்ட நாயனார்
44) திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்
45) திரு நீல நக்க நாயனார்
46) திருமூலநாயனார்
47) நமிநந்தியடிகள்
48) நரசிங்கமுனையரைய நாயனார்
49) நின்றசீர் நெடுமாற நாயனார்
50) நேச நாயனார்
51) புகழ்ச்சோழ நாயனார்
52) புகழ்த்துணை நாயனார்
53) பூசலார் நாயனார்
54) பெருமிழலைக் குறும்ப நாயனார்
55) மங்கையர்க்கரசியார்
56) மானக்கஞ்சாற நாயனார்
57) முருக நாயனார்
58) முனையடுவார் நாயனார்
59) மூர்க்க நாயனார்
60) மூர்த்தி நாயனார்
61) மெய்ப்பொருள் நாயனார்
62) வாயிலார் நாயனார்
63) விறன்மிண்ட நாயனார்

அறுபத்து மூன்று நாயன்மார்கள் தவிர ஒன்பது தொகையடியார்களின் கூட்டங்களைச் சேக்கிழார் பாடியுள்ளார். அவர்கள் தில்லை வாழ் அந்தணர், பொய்யடிமை இல்லாத புலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், முப்போதும் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார் ஆகியோர் ஆவர்.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் பன்னிரண்டு திருமுறைகளைச் சேர்ந்த பாடல்களைப் புனைந்தவர்கள் எழுவர் ஆவர்.

இவ்வறுபத்து மூன்று நாயன்மார்கள் மற்றும் தொகை அடியார்களின் வரலாற்றினைச் சிறப்பாகப் **பெரிய புராணம்** விளக்குகிறது.

**பெரிய புராணம் "உலகெலாம்"** என்று தொடங்கி **"உலகெலாம்"** என்று முடிகிறது. இது **பெரியபுராணம்** எல்லா உலகுக்கும் உரியது என்பதைக் குறிக்கின்றது. இச்சிறப்பு மிக்க காவியத்தில் இசையும் கலந்துள்ளதில் ஐயம் ஒன்றுமில்லை என்றே எண்ணத் தோன்றுகிறது. இவ்வளவு பொருள் பொருந்தியுள்ள நூலில் இசைச் செய்திகளையும் கையாண்டு தமிழிசை உலகிற்குப் பெருமை சேர்த்துள்ளார் சேக்கிழார்.

# சேக்கிழார் கூறும் பண் மற்றும் பாடல் பற்றிய செய்திகள்

## சேக்கிழார் கண்ட இசைத்தமிழ்

திருத்தொண்டர் புராணத்தின் முதற் செய்யுள்:

**உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்**
**நிலவு உலாவிய நீர்மலி வேணியன்**
**அலகு இல் சோதியன் அம்பலத்து ஆடுவான்**
**மலர் சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம்**

என்பதாகும்.

முதற் செய்யுளிலேயே இறைவனை **"அம்பலத்து ஆடுவான்"** என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சிவபெருமான் அலகில் சோதியனாயினும் ஆன்மாக்கள் மீது வைத்த அளவற்ற பெருங்கருணையினாலே திருவருளையே திருமேனியாகக் கொண்டு சிற்றம்பலத்திலே ஆடுகின்றார் என்பதைத் தம்மனதினில் கொண்டு **"அம்பலத்து ஆடுவான்"** என்று கூறுகின்றார். ஆண்டவனது அருள் நாத ஒலி சேக்கிழார் பெருமானைத் தெய்வப் புலவராக்கிப் பெரிய புராணத்தைப் பாடவைத்தது. பெரியபுராணத்திற்கு முதலாக நின்ற திருத்தொண்டத் தொகைக்கும் இறைவன் அடியெடுத்துக் கொடுத்தது ஈண்டுக் கருதற்பாலது.

திருமூலரும் தமது திருமந்திரத்தில் இறைவனின் ஆடலைக் குறிப்பிட்டு, **"குரவனாய் எங்கணும் கூத்துகந்தானே"** என்று பாடுகின்றார். மேலும் அவர்

**வேதங்க ளாட மிகுவாகம மாடக்**
**கீதங்க ளாடக் கிளரண்ட மேழாடப்**
**பூதங்க ளாடப் புவன முழுதாட**
**நாதங்கொண் டாடினான் ஞானாநந்த கூத்தே**

என்றும் குறிப்பிடுகின்றார்.

ஆண்டவனின் திருக்கூத்து மிக முக்கியமான இசைச் செய்தி மட்டுமல்ல, அவர் திருநடனத்தில் ஐந்தொழில்கள் நிகழ்கின்றன. அவை ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பவை ஆகும்.

அம்பலத்தாடும் இறைவனின் பாதத்தில் சிலம்பு உள்ளது. அதனைச் சேக்கிழார் பெருமான் **"மலர் சிலம்படி"** என்று குறிப்பிடுகின்றார். **"மலர் சிலம்பு"** என்ற சொல் இங்கு வினைத் தொகையாக வருகின்றது.

**"திருச்சிலம்போசை ஒலிவழியே சென்று நிருத்தனைக் கும்பிட்டென்றுந்தீ பற"** என்று திருவுந்தியாரில் குறிப்பிடப் பட்டுள்ளது, இங்கு நினைவுகூரத்தக்கது.

இதன் பிறகு இரண்டாவது செய்யுளில் "எடுக்கும் மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்..." என்று முழுமுதற்கடவுளாய் விளங்கும் வினாயகப் பெருமானை வணங்குகிறார். சேக்கிழார் பெருமான் தமது பத்தாவது பாடலில் இந்த நூலின் பெயரைக் குறிப்பிடுகின்றார். அச்செய்யுள் பின்வருமாறு:

**இங்கு இதன் நாமம் கூறின்**
**இவ்வுலகத்து முன்னாள்**
**தங்கு இருள் இரண்டில் மாக்கள்**
**சிந்தையுள் சார்ந்து நின்ற**
**பொங்கிய இருளை ஏனைப்**
**புற இருள் போக்குகின்ற**
**செங்கதிரவன் போல் நீக்கும்**
**'திருத் தொண்டர் புராணம்' என்பாம்**

இவ்வாறு சிலம்பு ஒலி பற்றியும் நடனம் பற்றியும் தமது முதல் பாடலிலேயே புகலும் சேக்கிழார், தமது திருத்தொண்டர் புராணத்தில் கூறியுள்ள இசைச் செய்திகளை இச்சிறு ஆய்வில் காண்போம்.

முதலில் சேக்கிழார் கூறியுள்ள பண் மற்றும் பாடல் குறித்த செய்திகளைக் காண்போம். திருநாட்டுச் சிறப்புக் கூறுமிடத்து,

**மங்கல வினைகள் எங்கும்**
**மணம் செய் கம்பலைகள் எங்கும்**
**பங்கய வதனம் எங்கும்**
**பண்களின் மழலை எங்கும்**
**பொங்கு ஒளிக்கலன்கள் எங்கும்**
**புதுமலர்ப் பந்தர் எங்கும்**
**செங்கயல் பழனம் எங்கும்**
**திருமகள் உறையுள் எங்கும்** **(பா.30)**

என்று சேக்கிழார் கூறியுள்ளார்.

**“கம்பலைகள்”** என்ற சொல்லிற்கு **“முழக்கங்கள்”** என்று பொருள். பெண்மக்களின் இளஞ்சொற்கள் “பண்” போன்றிருத்தலானும் எல்லாப் பண்ணிசையும் அவர்கள் மழலையிலிருத்தலானும் “பண்களின் மழலை” என்று குறிப்பிடுகின்றார். பெண்களின் குரலைப் பற்றிக் கூறும்போது அதன் இனிமையை உணர்த்த, அக்குரல் வளத்தில் இசை இருப்பதனைக் குறிப்பிட்டுப் பல புலவர்கள் பாடல்களை எழுதியுள்ளனர்.

இதில், பெண்களின் இளஞ்சொற்கள் பண்ணிசைக்கு ஒப்பாகக் கூறப்பட்டுள்ளன. சிலப்பதிகாரத்தில் மனையறம்படுத்த காதையில் கோவலன் கண்ணகியின் குரல்வளத்தைக் குறிப்பிடுங்கால்,

**குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த நின் மழலை**

என்று கூறுவது ஈண்டு நினைவுகூரத் தக்கதாகும்.

சேக்கிழார் பெருமான் திருநகரச் சிறப்பைக் கலிவிருத்த மாகப் பாடியுள்ளார். திருநகரச் சிறப்பைக் கூறும் 2வது பாடலில்

**... கீத ஓசையுமாய்க் கிளர்வு உற்றவே**

என்று குறிப்பிடுகின்றார். **“கீதம்”** என்பது இசைப் பாடலைக் குறிக்கின்றது. தற்கால வழக்கில் **“கீதம்”** என்பது ஓர் இசை உருவைக் குறிப்பிடுகின்றது. செவ்விசை பயில்வோர் கற்கும் எளிய இசை உருக்களில் கீதமும் ஒன்றாகும். இதற்கு எடுத்துக்காட்டாகத் தஞ்சைப் பொன்னைய்யா பிள்ளை இயற்றிய **“வாசரவணனே, வரமருள் வேலா”** என்று அரிகாம்போதி இராகத்தில், ஆதி தாளத்தில் அமைந்த கீதத்தைக் கூறலாம்.

**“கீதம்”** என்ற சொல் எவ்வகைப் பாடலையும் குறிக்கும். பண்ணோடு இயைந்த பாடல்கள் பாடப்பெற்றன என்று இங்குச் சேக்கிழார் பிரான் அவர்கள் குறிப்பிடுவதாக எடுத்துக் கொள்ளலாம்.

மேலும் தடுத்தாட்கொண்ட புராணம் 29ஆம் பாடலில் **“கீதம்”** என்ற சொல் எடுத்தாளப்பட்டுள்ளது. அப்பாடலானது பின்வருமாறு :

**மங்கல கீத நாத மறையவர்**
**குழாங்கள் சூழ்ந்து**
**தொங்கலும் விரையும் சூழ்ந்த**
**மைந்தரும் துவன்றிச் சூதும்**
**பங்கய முகையும் சாய்த்துப்**
**பணைத்து எழுந்து அணியில்மிக்க**
**குங்கும முலையி னாரும்**
**பரந்துஎழு கொள்கைத்து ஆகி**

**“மங்கல கீத நாத மறையவர்”** என்று குறிப்பிட்டமையால் அவர்கள் மங்கலமான பாடல்களைப் பாடினார்கள் என்பது நமக்குத் தெரிய வருகிறது. சுந்தரமூர்த்தி நாயனாரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் தடுத்தாட்கொண்ட புராணத்தில் அவரது திருமணத்தைப் பற்றி விளக்கும்போது சேக்கிழார் பெருமான் இவ்வரிகளைப் பாடியுள்ளார்.

திருமணம் என்ற மங்கலமான சடங்கு நிகழும்போது மக்கள் ஒன்று கூடுவது வழக்கம். அவ்வாறு அவர்கள் கூடும்போது பாடல்களைப் பாடி மகிழ்வதை இன்றும் நாம் காணலாம். சுந்தரமூர்த்தி நாயனாரின் திருமண நிகழ்வின்போது மக்கள் திரளாகக் கூடிப் பாடல்களைப் பாடி மகிழ்ந்தனர். அதனை 171வது பாடலில் சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுள் பின்வருமாறு :

**கண்கள் எண்இலாத வேண்டும்**
**காளையைக் காண என்பார்**
**பெண்களில் உயர நோற்றாள்**
**சடங்கவி பேதை என்பார்**
**மண்களி கூர வந்த**
**மணம்கண்டு வாழ்ந்தோம் என்பார்**
**பண்களில் நிறைந்த கீதம்**
**பாடுவார் ஆடு வார்கள்**

பண்ணப் படுவது பண்ணாகும். **“பண்”** என்ற சொல்லிற்குத் தற்கால வழக்கில் **“இராகம்”** என்று பொருள் கொள்ளலாம். பாடல்கள் இசைக்கும்போது இசை வாணர்கள் பண்களோடு இசைப்பார்கள். தமிழிசைப் பாடல்கள் ஆதிகாலந் தொட்டே பண்ணோடுதாம் பாடப்பட்டு வருகின்றன. பரிபாடலிலேயே பண்ணும் பாடலுக்கு இசையமைத்தவரின் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும் தேவாரப் பாடல்கள் இன்றுவரை அவை இயற்றப்பட்ட பண்ணிலேயே பாடப்படுகின்றன. இறைவனைப் **“பண்ணகத்தான்”** என்று தெய்வப் புலவர்கள் குறிப்பிடுகின்றனர். அத்தகையை சிறப்புமிக்க **“பண்களில் நிறைந்த கீதத்தை”** மக்கள் பாடுவதைச் சேக்கிழார் பெருமான் அவர்கள் மேற்கண்ட செய்யுளில் குறிப்பிடுகின்றார். அதோடு மட்டுமல்லாமல், பாடிக்கொண்டே அவர்கள் ஆடுவதையும் குறிப்பிடுகின்றார்.

இத்தகைய திருமணத்தைத் தடுத்து இறைவன் சுந்தரமூர்த்தி நாயனாரை ஆட்கொண்டார். தம்மைத் தடுத்தாட் கொண்டது இறைவனே என்று உணர்ந்தபோது அவர் இறைவனிடம் சரண்புகுந்தார். இறைவன் அவரிடம்

**மற்றுநீ வன்மை பேசி**
**வன்தொண்டன் என்னும் நாமம்**
**பெற்றனை நமக்கும் அன்பின்**
**பெருகிய சிறப்பின் மிக்க**
**அர்ச்சனை பாட்டே ஆகும்**
**ஆதலால் மண்மேல் நம்மைச்**
**சொல்தமிழ் பாடுக என்றார்**
**தூமறை பாடும் வாயார்**

என்று தம்மைப் புகழ்ந்து பாடக் கூறினார். இது 216வது பாடலாக வருகிறது. அர்ச்சனைகளுள் பாட்டே சிறந்ததென்க. **"தமிழ்பாடுக"** என்று இறைவன் கூறியது தமிழ்ப்பாடலைத் தம் அன்பர் வாயிலாகக் கேட்க விழைந்ததையும், தமிழின் மாண்பையும், இனிமையையும், பிறவற்றையும் தெரிவிப்பதாகும்.

217வது மற்றும் 218வது பாடல்களில் இறைவனின் கட்டளையை வன்தொண்டர் ஏற்றது குறிப்பிடப்பட்டுள்ளது. தாம் இறைவனை எவ்வாறு பாடவேண்டும் என்றும் அவர் கேட்கின்றார். அப்பாடல்கள் பின்வருமாறு :

**தேடிய அயனும் மாலும்**
**தெளிவுற ஐந்தெ ழுத்தும்**
**பாடிய பொருளாய் உள்ளான்**
**பாடுவாய் நம்மை என்ன**
**பாடிய மனத்தர் ஆகி**
**நம்பியா ரூரர் மன்றுள்**
**ஆடிய செய்ய தாளை**
**அஞ்சலி கூப்பி நின்று** **(பா.217)**

**வேதியன் ஆகி என்னை**
**வழக்கினால் வெல்ல வந்த**
**ஊதியம் அறியா தேனுக்கு**
**உணர்வு தந்து உய்யக்கொண்ட**
**கோதுஇலா அமுதே இன்றுஉன்**
**குணப்பெருங்கடலை நாயேன்**
**யாதினை அறிந்து என்சொல்லிப்**
**பாடுகேன் எனமொ ழிந்தார்** **(பா.218)**

இறைவன் அவருக்குப் பதிலிருக்கையில்

**என் பெயர் பித்தன் என்றே பாடுவாய் என்றார் (பா.219)**

என்று கூறியதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

எனவே **"பித்தா பிறைசூடி"** என்ற பாடலை முதன்முதலாகப் பாடுகின்றார். அவர் பாடும்போது எவ்வாறு பாடுகின்றார் என்பதனைச் சந்தக்கலி விருத்தத்திலே அமைந்த 221வது பாடலில் சேக்கிழார் பெருமான் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். அப்பாடல் பின்வருமாறு:

**முறையால்வரு மதுரத்துடன் மொழிஇந்தளம் முதலில்**
**குறையாநிலை மும்மைப்படி கூடும்கிழ மையினால்**
**நிறைபாணியின் இசைகொள் புணர் நீடும்புகழ்**
**வகையால்**
**இறையான்மகிழ் இசைபாடினன் எல்லாம் நிகர்**
**இல்லான்**

இறைவனுக்கு மகிழ்ச்சி தரக்கூடிய இசையை இந்தளத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியதை இப்பாடல் கூறுகிறது. **"இந்தளப்பண்"** என்பது தற்காலத்திய **"மாயாமாளவகௌளை"** இராகத்தைக் குறிக்கின்றது, என்பது ஒருசாரார் கருத்து. மற்றொரு சாரார் **"இந்தளம்"** என்பது தற்காலத்திய **"ஹிந்தோளராகம்"** என்ற கருத்தைக் கொண்டுள்ளனர். **"முறையால் வரு மதுரத்துடன்"** என்ற சொற்றொடர் படிப்படியாய் உயர்ந்து வருகின்ற சுர விரிவாக்கத்தால் ஏற்படும் நயப்பைக் குறிக்கும் என்பது அறிஞர்களின் கருத்து. ஒருவர் ஒரு பண்ணைப் பாடும்போது படிப்படியாக அதன் அழகு வெளிப்படும்படி பாடுவது செவ்விசையில் உள்ள வழக்காகும்.

அந்த வகையில் இந்தளப்பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார், அதன் இலக்கணத்தினின்றும் சிறிதும் வழுவாது பாடியதை இப்பாடல் குறிக்கிறது. சுந்தரர் நலிதல், படுத்தல், எடுத்தல் என்னும் மும்மைப்படியில் இறைவனைப் பாடினார். அவர் பாடிய பாடல் பாணியில் அழகாக அமைந்தது. **'பாணி'** என்றால் **"தாளம்"** என்று பொருள். சுந்தரர் பாடிய பாடல் இராகம் மற்றும் தாளம் பிறழாமல் மிக அழகாக அமைந்தது. முறையாக, செவ்விசையில் பண் மற்றும் பாணியோடு கூடிய பாடலைப் பாடியதால் இறைவன் மகிழ்ந்ததை

**"இறையான் மகிழ் இசை பாடினன்"** என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு சிறப்புறப்பாடிய சுந்தரரை இறைவன், தம்மைப் பற்றி மேலும் பாடப் பணித்தார்.

அதனைச் சேக்கிழார் பெருமான் தமது 222வது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**சொல்ஆர் தமிழிசை பாடிய தொண்டன்தனை இன்னும்**
**பல்ஆறு உலகினில் நம்புகழ்பாடு என்று உறுபரிவில்**
**நல்லார் வெண்ணெய் நல்லூர் அருள் துறைமேவிய**
**நம்பன்**
**எல்லா உலகு உய்யப்புரம் எய்தான் அருள்செய்தான்**

என்று குறிப்பிடுகின்றார்.

**"சொல்லார்"** என்றால் **"இன் சொல் நிறைந்த"** என்று பொருள். எனவே **"சொல்லார் தமிழிசை"** என்பது இனிய சொற்கள் நிறையப் பெற்ற தமிழையும் அதில் உள்ள இனிய இசையையும் குறிக்கும். இவ்வாறு இனிய தமிழிசையைப் பாடிய வன்தொண்டர் சுந்தரரை, இறைவன், **"இன்னும் பல்ஆறு உலகினில் நம்புகழ் பாடு"** என்று கூறுகின்றார்.

இறைவனை நோக்கிப் பல பாடல்களைப் புனைந்த சுந்தரர் தம்மை, **"மீளா அடிமை"** என்று செந்துருத்திப் பண்ணில் பாணியோடு இயைந்த பாடலில் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு தடுத்தாட்கொள்ளப்பட்ட சுந்தரர், திருநாவலூர் மற்றும் திருத்துறையூர் சென்று அங்கு உறையும் இறைவனைத் திருப்பதிகங்கள் பாடிப் பணிந்தார். அதனைச் சேக்கிழார் தமது 224வது மற்றும் 225வது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். அவை பின்வருமாறு :

**... திருநாவலூர் புகுந்து தேவர்பிரான்**
**தனைப் பணிந்து திருப்பதிகம் பாடினார் (பா.224)**

**சிவன் உறையும் திருத்துறையூர்**
**சென்று அணைந்து தீவினையால்**
**அவநெறியில் செல்லாமே**
**தடுத்து ஆண்டாய் அடியேற்குத்**
**தவநெறிதந்து அருள் என்று**
**தம்பிரான் முன்நின்று**
**பவநெறிக்கு விலக்கு ஆகும்**
**திருப்பதிகம் பாடினார் (பா.225)**

இவ்வாறு பல தலங்களுக்குச் சென்று சுந்தரமூர்த்தி நாயனார் பதிகம் பாடியதைச் சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டுள்ளார். பல தலங்களுக்குச் சென்ற அவர், தில்லையம்பதியைச் சென்று அடைந்து அங்கு ஈசனை நடராசனாகக் கண்டுகளிப்புற்றார். இறைவனின் நடனத்தைக் கண்ணுற்ற சுந்தரமூர்த்தி நாயனார், பண்ணமைந்த பாடலினால் அருமையான

பதிகம் பாடியதைச் சேக்கிழார் பெருமான் தமது 253வது பாடலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் :

**தெள்நிலாமலர்ந்த வேணியாய் உன்தன்**
**திருநடம் கும்பிடப்பெற்று**
**மண்ணிலே வந்த பிறவியே எனக்கு**
**வாலிது ஆம்இன்பம் ஆம் என்று**
**கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக்**
**கைம்மலர் உச்சி மேல் குவித்துப்**
**பண்ணினால் நீ டி அறிவு அரும்பதிகம்**
**பாடினார் பரவினார் பணிந்தார்** **(பா.253)**

254வது பாடலில் தடுத்தாட்கொள்ளப்பட்ட வன்தொண்டர் தம்முன் வந்தபோது, வயல்கள் சூழ்ந்த திருவாரூரில் எழுந்தருளிய பெருமான் **"வருக நம்பால்"** என உரைத்தார் என்ற செய்தியை நாம் பார்க்கிறோம். இப்பாடலில் விந்துவிலிருந்து நாதம் தோன்றுவது சூக்குமமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. விந்து ஆகாயத்தை ஒரு பற்றுக்கோடாகக் கொண்டு நாதத்தைத் தோற்றுவித்தலால் **"வானில் அடுத்த போதினில் வந்து எழுந்ததோர் நாதம்"** என்று சேக்கிழார் பெருமான் அவர்கள் குறிப்பிடுகின்றார். அருணகிரிநாதர் தமது திருப்புகழில் **"நாதவிந்துகலாதி நமோ நம"** என்று குறிப்பிடுவது ஈண்டுநினைவு கூரத்தக்கது.

259வது பாடலில், திருத்தோணிபுரத்து இறைவனைச் சுந்தரர் பாடியதைச் சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**மண்டியபேர் அன்பினால் வன்தொண்டர் நின்று இறைஞ்சித்**
**தெண்திரை வேலையில் மிதந்த திருத்தோணி புரத்தாரைக்**
**கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்தபடி என்று**
**பண்தரும் இன்னிசை பயின்ற திருப்பதிகம் பாடினார்**
**(பா.259)**

பிரளய காலத்திலும் சீர்காழி அழியாமல் தோணி போல் மிதந்தலால், அதற்குத் தோணிபுரம் என்றொரு பெயர் வழங்கப் படுகிறது. இத்தோணிபுரத்தில் வீற்றிருக்கும் இறைவனைநோக்கிப் பண்ணில் அமைந்த திருப்பதிகத்தை இனிமையாகப் பாடினார் சுந்தரமூர்த்தி நாயனார் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.

இதன்பிறகு சுந்தரமூர்த்தி நாயனார் இன்ன தன்மையன் என்று உணரமுடியாத இறைவனைத் திருக்கோலக்காவில் சென்று தரிசனம் செய்து பாடியதைச் சேக்கிழார் பெருமான் தமது 260வது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**இருக்கோலம் இடும் பெருமான் எதிர்நின்றும் எழுந்தருள**
**வெருக்கோள் உற்று அது நீங்க ஆரூர்மேல் செல விரும்பிப்**
**பெருக்கு ஓதம்சூழ்புறவப் பெரும்பதியை வணங்கிப் போய்த்**
**திருக்கோலக்கா இறைஞ்சிச் செந்தமிழ் மாலைகள் பாடி**
**(பா. 260)**

தமிழ்ப்பாக்களைப் பாடியே இறைவனுக்குச் சுந்தரர் மாலை சூட்டியதைச் **"செந்தமிழ் மாலைகள் பாடி"** என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

இவ்வாறே பல இறைஉறைவிடங்களைச் சென்று பாடி, சுந்தரர் திருவாரூரை அடைந்தார்.

அங்குள்ள தொண்டர்களுக்கு இறைவனே சுந்தரரின் வருகையைத் தெரிவித்து அவரை எதிர்கொண்டு அழைக்க ஏவினார். அவ்வாறே இறைவனால் பணிக்கப்பட்ட தொண்டர்கள் அவரை மிகச் சிறப்பாக வரவேற்றதை, சேக்கிழார் பெருமான் 267, 268 மற்றும் 269வது பாடல்களில் மிக அழகாக எடுத்துரைத்துள்ளார். அப்பாடல்களில் பல இசை நிகழ்வுகள் காணப்படுகின்றன. அவை பின்வருமாறு :

**சோதிமணி வேதிகைகள் தூநறுஞ்சாந்து அணி நீவிக்**
**கோதுஇல் பொரி பொன் சுண்ணம் குளிர்தரள மணிபரப்பித்**
**தாது தவிழ் பூந்தொடை மாலைத் தண் பந்தர்களும் சமைத்து**
**வீதிகள் நுண்துகள் அடங்க விரைப்பனிநீர் மிகத்**
**தெளித்தார் (பா.267)**

**மங்கல கீதம் பாட மழைநிகர் தூரியம் முழங்கச்**
**செங்கயல்கண் முற்று இழையார் தெற்றிதொறும் நடைபயில**
**நங்கள் பிரான் திருஆரூர் நகர்வாழ்வார் நம்பியைமுன்**
**பொங்கு எயில்நீள் திருவாயில் புறம்உறவந்து**
**எதிர்கொண்டார் (பா.268)**

**வந்து எதிர் கொண்டு வணங்குவார் முன்**
**வன்தொண்டர் அஞ்சலி கூப்பி வந்து**
**சிந்தை களிப்புஉற வீதி ஊரு**
**செல்வார் திருத்தொண்டர் தம்மைநோக்கி**
**எந்தை இருப்பதும் ஆரூர் அவர்**
**எம்மையும் ஆள்வரோ கேளீர் என்னும்**
**சந்த இசைப் பதிகங்கள் பாடித்**
**தம்பெருமான் திருவாயில் சார்ந்தார் (பா.269)**

சுந்தரரை வரவேற்ற திருவாரூர் மக்கள், அவரை மங்கலம் நிறைந்த கீதங்களைப் பாடி வரவேற்றதை ஆசிரியர் குறிப்பிடுகின்றார். மேலும் திருவாரூரில் வீற்றிருக்கும் தியாகராசப் பெருமானைத் தமது தந்தை

என்று குறிப்பிடும் சுந்தரமூர்த்தி நாயனார், அவரைச் சந்தப்பாக்கள் நிறைந்த இசைப்பதிகங்கள் பாடி மகிழ்வித்தார் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.

"சந்தம்" என்பது தாளக் கட்டினைக் குறிப்பிடும் ஒரு சொல்லாகும். அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ்ப்பாடல்கள் சந்தப்பாக்களுக்குப் பெயர் போனவை ஆகும். தேவாரப் பதிகங்களிலும் சந்தங்கள் இடம்பெற்றிருந்தன என்பதனைச் சேக்கிழார் பெருமான் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

திருவாரூரில் முன்வினை பற்றிப் பரவையார் பிறந்து வளர்ந்தார். அவர் வளரும்போது கழங்கு, பந்து, ஊசல், அம்மானை போன்ற விளையாட்டுக்களை விளையாடியும், இசைப் பயிற்சி செய்தும் வளர்ந்தார். இதனைச் சேக்கிழார் பெருமான் தமது 281வது பாடலில் மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**நாடும்இன் பொற்பு வாய்ப்பு**
**நாளும்நாள் வளர்ந்து பொங்க**
**ஆடும்மென் கழங்கும் பந்தும்**
**அம்மனை ஊசல் இன்ன**
**பாடும்இன் இசையும் தங்கள்**
**பணிமலை வல்லி பாதம்**
**கூடும்அன்பு உருகப் பாடும்**
**கொள்கை ஓர் குறிப்புத் தோன்ற (பா.281)**

சுந்தரர் பாடிய பாடல்கள் அனைத்தும் திருப்பாட்டுக்களாகும். திருவாரூர் இறைவன், அவரைத் தொண்டர்கள் வரலாற்றைப் பாடும்படி பணித்தார். இதனைச் சேக்கிழார் பெருமான் தமது 343வது பாடலில் குறிப்பிடுகின்றார்.

**நாதனார் அருளிச் செய்ய**
**நம்பி ஆரூரர் நான் இங்கு**
**ஏதம் தீர் நெறியைப் பெற்றேன்**
**என்று எதிர் வணங்கிப் போற்ற**
**நீதியால் அவர்கள் தம்மைப்**
**பணிந்துநீ நிறை சொல் மாலை**
**கோது இலா வாய்மையாலே**
**பாடு என அண்ணல் கூற (பா.343)**

"நான் எவ்வாறு பாடுவேன்?" என்று இறைவனிடம் கேட்கிறார் சுந்தரர். அவர் அதற்கு

**தொல்லைமால் வரைபயந்த**
**தூயாள்தன் திருப்பாகன்**

**அல்லல் தீர்ந்து உலகுஉய்ய**
**மறை அளித்த திருவாக்கால்**
**தில்லைவாழ் அந்தணர்தம்**
**அடியார்க்கும் அடியேன் என்று**
**எல்லைஇல் வண் புகழாரை**
**எடுத்து இசைப்பா மொழி என்றார் (பா.345)**

இவ்வாறு இறைவன் கட்டளையிட, சுந்தரர் பாடிய அனைத்துப் பாடல்களும் திருப்பாடல்களே ஆகும்.

சேக்கிழார் பெருமான் மெய்ப்பொருள் நாயனாரின் வாழ்க்கையை எடுத்துரைக்கையில், அவர் பூசை செய்யும் இறைவன் உறைவிடத்தில் எவ்வாறு ஆடலும் பாடலும் இடம்பெற்றன என்பதனைத் தமது 469வது பாடலில் எடுத்துரைக்கின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**மங்கையைப் பாகம் ஆக**
**உடையவர் மன்னும் கோயில்**
**எங்கணும் பூசை நீடி**
**ஏழ்இசைப் பாடல் ஆடல்**
**பொங்கிய சிறப்பின்மல்கப்**
**போற்றுதல் புரிந்து வாழ்வார்**
**தங்கள் நாயகருக்கு அன்பர்**
**தாள் அலால் சார்பு ஒன்று இல்லார் (பா.469)**

**"ஏழ்இசை"** என்பது ஏழு சுரங்களைக் குறிக்கும். அவையாவன: குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.

ஏழிசையில் இருந்து பண்கள் பிறக்கின்றன. ஏழு இசையும் ஒருங்கிணைந்த பண்களில் பிறந்த பாடல்களைப் பாடியும், அதற்கேற்றபடி ஆடியும், அடியவர்கள் இறைவனைப் போற்றி வணங்கியதைச் சேக்கிழார் பெருமான் இங்குக் குறிப்பிடுகின்றார். மேலும் 499வது பாடலில்

**ஞாலம் உய்ய நாம் உய்ய**
**நம்பிசைவ நல்நெறியின்**
**சீலம் உய்யத் திருத்தொண்டத்**
**தொகைமுன் பாட ...**

என்று சுந்தரர் திருத்தொண்டத் தொகையைப் பாடியதைக் குறிப்பிடுகிறார். இப்பாடல் விறன்மீண்ட நாயனாரின் கதையைக் கூறுமிடத்து வருகிறது.

சேக்கிழார் ஆனாய நாயனாரின் வரலாற்றை எடுத்து இயம்பியுள்ளார். ஆனாய நாயனார் ஆனிரை மேய்ப்பவர். அவற்றினைத் தமது குழலோசையால் வென்றவர். அவர் குழல் இசைத்தவிதம் பற்றிக் குறிப்பிடும் பாடல்களில் பண் மற்றும் இசை பற்றிய செய்திகளை அள்ளித் தெளித்துள்ளார். சேக்கிழாரின் இசைப்புலமை இப்பாடல்களில் மிகுதியாக வெளிப்படுகின்றது. **955**வது பாடலில் பண்பற்றிய செய்தியினைக் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**மாறுமுதல் பண்ணின்பின் வளர்முல்லைப் பண் ஆக்கி**
**ஏறிய தாரமும் உழையும் கிழமை கொள இடும்தானம்**
**ஆறுஉலவும் சடைமுடியார் அஞ்செழுத்தின் இசை பெருகக்**
**கூறிய பட்டடைக் குரலாம் கொடிப்பாலையினில் நிறுத்தி**
**(பா.955)**

முதல் பண் **"குறிஞ்சி"** என்பது அறிஞர்களின் கருத்து. முதலில் அதனை இசைத்துப் பின் முல்லைப் பண்ணை ஆனாய நாயனார் இசைத்தார் என்ற குறிப்பு கிடைக்கிறது. சிலப்பதிகாரத்தில், பெண்கள் கண்ணனை எண்ணிக் குரவைக் கூத்தாடும்போது முல்லைப் பண்ணைப் பாடினர் என்ற குறிப்பு கிடைக்கிறது, (மாயவன் பாடல், 21வது வரி). கண்ணன் ஆனிரை மேய்ப்பவன். ஆனாய நாயனாரும் ஆனிரை மேய்ப்பவர். இருவரும் முல்லைப்பண்ணை விரும்பி இசைத்தமை பொருத்தமே. முல்லைப்பண் என்பது ஐந்து சுரங்களைக் கொண்ட ஒரு பண்ணாகும். சிவனின் பஞ்சாக்கர மந்திரமும் ஐந்தெழுத்தாகும். சிவன்பால் பற்றுக் கொண்டதால்தான் பஞ்சாக்கரத்தைக் குறிக்கும் ஐந்திசையை நாயனார் இசைத்தார். **"தாரம்"** என்பது **'நி'** என்ற கோவையைக் குறிக்கும் (ஏழு கோவைகள் ச, ரி, க, ம, ப, த, நி), **"உழை"** என்பது 'ம' என்ற கோவையைக் குறிக்கும். **"தாரமும் உழையும் கிழமை கொள்ள"** என்பது இணை, கிளை, பகை, நட்பு என்ற நான்கில் **'இணை'** என்பதனைக் குறிக்கும். ஏனெனில் இணைக் கோவைகளாவன:

| | | |
|---|---|---|
| **ச** | **–** | **ப** |
| **ப** | **–** | **ரி** |
| **ரி** | **–** | **த** |
| **த** | **–** | **க** |
| **க** | **–** | **நி** |
| **நி** | **–** | **ம** |
| **ம** | **–** | **ச** |

ஆகியவை ஆகும். "பட்டடை" என்ற சொல் '**இளி**' அல்லது '**ப**' வைக் குறிக்கும். சிலம்பில் "**வண்ணப்பட்டடை யாழ்மேல் வைத்து**" என்ற குறிப்பு வருகின்றது. பாடலில் "**பட்டடைக்குரலாம்**" என்று கூறப்பட்டுள்ளது. இளி குரலாயது "**கோடிப்பாலை**" ஆகும். "**கோடிப்பாலை**" என்பது இங்குக் "**கொடிப்பாலை**" என்று குறிக்கப்பட்டுள்ளது.

"**முல்லைப்பண்**" என்பது தற்காலத்திய "**மோகன இராகம்**" என்பது அறிஞர்களின் கருத்து. மோகன இராகத்தின் ஆரோசை மற்றும் அமரோசை பின்வருமாறு:

**ச ரி க ப த ச்**

**ச் த ப க ரி ச**

இந்த இராகத்தில் உள்ள சுரங்கள் ஐந்து. 'நமச்சிவாய' என்பது பஞ்சாக்கரம். எனவே பஞ்சாக்கரத்தைக் குறிக்கும் முல்லைப் பண்ணில் குழலிசைத்து ஆனாய நாயனார் ஆனிரை மேய்த்தார் என்று நாம் இங்குக் கொள்ளலாம்.

முதல் பண்ணாகக் குறிஞ்சிப் பண் வருகிறது. மேடான குறிஞ்சி நிலத்தில், அல்லது மலைச்சாரல்களில், ஆனிரை மேய்ப்பது வழக்கம் என்பதனை இது குறிக்கிறது போலும்.

மேலும், வண்ணப்பாடல்களைப் பற்றிச் சேக்கிழார் பெருமான் தமது 958வது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**எண்ணிய நூல் பெருவண்ணம் இடை வண்ணம் வனப்பு என்னும்**
**வண்ண இசை வகை எல்லாம் மாதுரிய நாதத்தில்**
**நண்ணிய பாணியும் இயலும் தூக்கும் நடைமுதல் கதியில்**
**பண் அமைய எழும் ஓசை எம்மருங்கும் பரப்பினார்**

**(பா.958)**

வண்ணம் மூன்று வகைப்படும். அவையாவன: பெருவண்ணம், இடைவண்ணம் வனப்பு வண்ணமாகும். இனிய குழலின் நாதத்தில் இவ்வண்ணங்களை அமைத்து ஆனாய நாயனார் இசைத்ததை, இங்கு ஆசிரியர் குறிப்பிடுகின்றார். '**நண்ணிய பாணி**' என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். '**பாணி**' என்பது தாளத்தினைக் குறிப்பதாகும். **சிலப்பதிகாரத்தில்** தண்ணுமை முதல்வனின் தன்மையைக் கூறுமிடத்து ஆசிரியர்

**ஆடல் பாடல் இசையே தமிழே**
**பண்ணே பாணி தூக்கே முடமே**

என்று குறிப்பிடுகின்றார். "**நடை முதல் கதியில் பண் அமைய**" என்ற குறிப்பு வருகின்றது. "**முதல்கதி**" என்பதனை "**முதல் வேகம்**"

என்றும் நாம் கொள்ளலாம். இவ்வாறு, இராகம், தாளம் முதலானவை முறையாக அமையப்பெற்ற இசையை ஆனாய நாயனார் இசைத்தார் என்று நாம் ஈண்டுப் பொருள் கொள்ளலாம்.

பாடல் எண்963–இல் குழலிலிருந்து எழுந்த இசையைத் தேவலோகப் பெண்கள் கேட்டு மகிழ்ந்ததைச் சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**சுரமகளிர் கற்பகப் பூஞ் சோலைகளின் மருங்கு இருந்து**
**சுரமலரின் அமுதுஊட்டும் கனிவாய் மென்கிள்ளையுடன்**
**விரவு நறுங்குழல் அலைய விமானங்கள் விரைந்து ஏறிப்**
**பரவிய ஏழிசை அமுதம் செவிமடுத்துப் பருகினார்**
**(பா.963)**

ஏழிசையிலிருந்து பிறந்த பண்களை ஆனாய நாயனார் திறம்பட இசைத்ததால் அமுதமாய் வந்த இசை வெள்ளத்தைத் தேவலோக மங்கையர் செவிமடுத்து இன்புற்றனர் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.

முருக நாயனாரின் சரித்திரத்தைக் கூறும் பாடல்களில் பண்களைப் பற்றிய செய்திகள் உள்ளன. 1024வது பாடலில் பண்பற்றிய செய்திகள் உள்ளன. அப்பாடல் பின்வருமாறு :

**நண்ணும் இசைதேர் மதுகரங்கள்**
**நனைமென் சினையின் மருங்கு அலைய**
**வண்ண மதுரத் தேன் பொழிவ**
**வாசமலர் வாயே அல்ல**
**தண்என் சோலை எம்மருங்கும்**
**சாரும் மடமென் சாரிகையின்**
**பண்ணின் கிளவி மணிவாயும்**
**பதிகச் செழுந்தேன் பொழியுமால் (பா.1024)**

பண்ணோடு கூடிய பாடல்களாகத் தேவாரப் பதிகங்கள் விளங்குவதை ஆசிரியர் இங்குக் குறிப்பிடுகின்றார்.

திருக்குறிப்புத் தொண்ட நாயனாரின் கதையைக் கூறும்போது **“காஞ்சிப் பண்ணைப்”** பற்றிச் சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**தண்காஞ்சி மென்சினைப்பூங் கொம்பர் ஆடல்**
**சார்ந்து அசைய அதன் மருங்கு சுரும்பு தாழ்ந்து**
**பண்காஞ்சி இசைபாடும் பழனவேலிப்**
**பணைமருதம் புடை உடைத்தாய்ப் பாரில் நீடும்**

**திண்காஞ்சி நகர் நொச்சி இஞ்சி சூழ்ந்த**
**செழுங்கிடங்கு திருமறைகள் ஒலிக்கும் தெய்வ**
**வண்காஞ்சி அல்குல் மலைவல்லி காக்க**
**வளர்கருணைக் கடல் உலகம் சூழ்ந்தால் மானும்**
**(பா.1168)**

**"காஞ்சிப்பண்", 103** பண்களில் இடம்பெறாத ஒரு பண் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

சண்டேசுர நாயனாரின் வரலாற்றைக் கூறும்போது, சேக்கிழார் பெருமான் பண்களைப் பற்றிய செய்திகளைக் கூறியுள்ளார். **1219**வது பாடலில் அதனைக் காணலாம்.

**பண்ணின் பயனாம் நல்இசையும்**
**பாலின் பயனாம் இன்சுவையும்**
**கண்ணின் பயனாம் பெருகொளியும்**
**கருத்தின் பயனாம் எழுத்து அஞ்சும்**
**விண்ணின் பயனாம் பொழி மழையும்**
**வேதப் பயனாம் சைவமும்போல்**
**மண்ணின் பயனாம் அப்பதியின்**
**வளத்தின் பெருமை வரம்பு உடைத்தோ**
**(பா.1219)**

இப்பாடல், சண்டேசுர நாயனார் பிறந்த ஊரின் பெருமையைக் கூறுமிடத்து வருகிறது. எச்சதத்தன் செய்த நல்வினைப் பயனால் அவர் விசாரசருமன் என்ற சண்டேசுர நாயனாரைத் தம் மகனாகப் பெற்றார். அது எவ்வாறு எனில் பண்ணின் பயனாக நல் இசை தோன்றுவதைப்போல் ஆகும் என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார். பண்பற்றித் தெரிந்தவரால்தான் அதனின்று நல்ல இசையை உண்டாக்க இயலும். பாடலை நன்கு புனைய வேண்டுமானால் அவருக்குப் பண் பற்றிய செய்திகள் நன்கு தெரிந்திருக்க வேண்டும் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்றை எடுத்து இயம்பும் போது பதிகம் பாடியமையால் அவரது உடல்பிணி நீங்கியமையை நமக்குச் சேக்கிழார் பெருமான் தெரிவிக்கிறார். அப்பாடல் பின்வருமாறு :

**மன்னும் பதிகம் அதுபாடியபின்**
**வயிறு உற்று அடுசூலை மறப்பிணிதான்**
**அந்நின்ற நிலைக்கண் அகன்றிடலும்**
**அடியேன் உயிரோடு அருள் தந்தது எனாச்**

**செந்நின்ற பரம் பொருள் ஆனவர்தம்**
**திருஆர் அருள் பெற்ற சிறப்பு உடையோர்**
**முன்னின்ற தெருட்சி மருட்சியினால்**
**முதல்வன் கருணைக்கடல் மூழ்கினரே**
**(பா.1341)**

மேலும் 1386வது பாடலில்

**... வெஞ்சுடர் மூஇலைச் சூல**
**வீரட்டர்தம் அடியோம் நாம்**
**அஞ்சுவது இல்லை என்று என்றே**
**அருந்தமிழ் பாடி உறைந்தார்**

என்றும் 1387வது பாடலில்

**தண்தமிழ் மாலைகள் பாடித்**
**தம்பெருமான் சரண் ஆக...**

என்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் அழகாகப் பதிகம் பாடியதைச் சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டுள்ளார்.

அப்பர் பிரான் திருநேரிசை பாடியதைச் சேக்கிழார் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**...மெய்த்தன்மையினில் விருத்தத் திருமொழி**
**பாடிப்பின்னையும் மேம்மேலும்**
**சித்தம் பெருகிய பரிவால் இன்புற்று**
**திருநேரிசைமொழி பகர்கின்றார் (பா.1438)**

'பத்தனாய்ப் பாடமாட்டேன்' என்று நாவுக்கரசர் எடுத்துப் பாடியதைச் சேக்கிழார் தமது1439வது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**பத்தனாய்ப் பாட மாட்டேன்**
**என்று முன் எடுத்துப் பண்ணால்**
**அத்தாஉன் ஆடல் காண்பான்**
**அடியனேன் வந்தவாறு என்று**
**இத்திறம் போற்றி நின்றே**
**இன்தமிழ் மாலை பாடிக்**
**கைத்திருத் தொண்டு செய்யும்**
**காதலில் பணிந்து போந்தார் (பா.1439)**

அப்பருக்குத் "தாண்டகவேந்தன்" என்ற பெயர் உண்டு. அவர் திருத்தாண்டகம் இயற்றியதைச் சேக்கிழார் பெருமான் தமது 1445வது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**அரியானை என்று எடுத்தே அடியவருக்கு**
**எளியானை அவர்தம் சிந்தை**
**பிரியாத பெரிய திருத்தாண்டகச் செந்**
**தமிழ் பாடிப் பிறங்கு சோதி**
**விரியா நின்று எவ்வுலகும் விளங்கியபொன்**
**னம்பலத்து மேவி ஆடல்**
**புரியா நின்றவர் தம்மைப் பணிந்து**
**தமிழால் பின்னும் போற்றல் செய்வார்**
**(பா.1445)**

காழியூர்ப் பிள்ளையாரைப் பற்றி அடியார்கள் நாவுக்கரசற்கு எடுத்துரைத்தனர். இவ்வாறு சம்பந்தரின் பெருமையை எடுத்து இயம்பும்போது சம்பந்தரின் தமிழிசை பற்றிக் கூறுவதாகத் தமது பாடலில் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**ஆழிவிடம் உண்டவரை அம்மைதிருப்**
**பால்அமுதம் உண்டபோதே**
**ஏழ்இசைவண் தமிழ்மாலை இவன் எம்மான்**
**எனக்காட்டி இயம்பவல்ல**
**காழிவரும் பெருந்தகைசீர் கேட்டலுமே**
**அதிசயம் ஆம் காதல் கூர**
**வாழி அவர் மலர்க்கழல்கள் வணங்குதற்கு**
**மனத்து எழுந்த விருப்புவாய்ப்ப (பா.1448)**

**"ஏழ்இசை"** ஆகிய ஏழு சுரங்களிலிருந்து தோன்றிய பண்களில் தமிழ்மாலை பாடியதை இங்குப் பெருமானார் குறிப்பிடுகின்றார்.

சீர்காழியில் அப்பரும் ஞானசம்பந்தரும் ஒன்று கூடி இறைவனைப் பாடியதைச் சேக்கிழார் தமது 1456வது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**பண்பயில் வண்டுஅறை சோலை சூழும் காழிப்**
**பரமர் திருக் கோபுரத்தைப் பணிந்துஉள் புக்கு**
**விண்பணிய ஓங்குபெரு விமானம் தன்னை**
**வலம்கொண்டு தொழுதுவிழுந்து எழுந்தஎல்லைச்**
**சண்பைவரு பிள்ளையார் அப்பர் உங்கள்**
**தம்பிரானாரை நீர்பாடீர் என்னக்**
**கண்பயிலும் புனல்பொழிய அரசும் வாய்மைக்**
**கலைபயிலும் மொழிபொழியக் கசிந்துபாடி**
**(பா.1456)**

அப்பர் பிரான் பாடிய பலவகை தமிழிசைப் பாடல்களைச் சேக்கிழார் தமது 1461வது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடலில் அப்பர் பிரான் திருத்தாண்டகம், திருக்குறுந்தொகை, திருநேரிசை,

சந்த விருத்தங்கள் முதலியவற்றைப் பாடியதைக் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**ஆவடுதெண் துறையாரை அடைந்துய்ந்தேன் என்ற**
**அளவு இல் திருத்தாண்டகம் முன் அருளிச் செய்து**
**மேவு திருக் குறுந்தொகை நேரிசையும் சந்த**
**விருத்தங்கள் ஆனவையும் வேறு வேறு**
**பாவலர் செந்தமிழ்த் தொடையால் பள்ளித் தாமம்**
**பலசாத்தி மிக்கு எழுந்த பரிவினோடும்**
**பூவலயத்தவர் பரவப் பலநாள் தங்கிப்**
**புரிவுறுகைத் திருத்தொண்டு போற்றிச் செய்வார்**
**(பா.1461)**

திருநாவுக்கரசர் **“ஒன்று கொலாம்”** என்ற பதிகத்தைப் பாடி அப்பூதி அடிகளின் பிள்ளைக்கு உயிர் கொடுத்த செய்தியை நமக்குச் சேக்கிழார் தருகிறார். சொல்ஆர் தமிழிசையில் பதிகம் பாடி இறந்தவருக்கு உயிர் கொடுக்கலாம் என்பதனை இப்பாடல் உணர்த்துகிறது. இப்பாடல் பின்வருமாறு :

**அன்று அவர்கள் மறைத்ததனுக்கு அளவு இறந்த**
**கருணையராய்க்**
**கொன்றை நறுஞ்சடையார் தம் கோயிலின்முன்**
**கொணர்வித்தே**
**ஒன்றுகொலாம் எனப்பதிகம் எடுத்து உடையான் சீர்பாடப்**
**பின்றை விடம்போய் நீங்கிப் பிள்ளை உணர்ந்து**
**எழுந்திருந்தான்**
**(பா.1478)**

திருக்கடவூரில் நாவுக்கரசர் இறைவனை நோக்கிப் பல பாடல்கள் புனைந்ததைச் சேக்கிழார் பெருமான் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**சீர்மன்னும் திருக்கடவூர்த் திருமயானமும் வணங்கி**
**ஏர்மன்னும் இன்இசைபாப் பலபாடி இனிது அமர்ந்து**
**கார்மன்னும் கறைக் கண்டர் கழல் இணைகள் தொழுது**
**அகன்று**
**தேர்மன்னும் மணிவீதித் திருஆக்கூர் சென்று அணைந்தார்**
**(பா.1518)**

திருவீழிமிழலையில் படிக்காசு பெறுவதற்காக இறைவனைப் பாடியதைச் சேக்கிழார் தமது 1527வது பாடலில்

**...ஞாலம் அறியப் படிக்காசு**
**வைத்தார் மிழலை நாயகன்**

என்று குறிப்பிடுகின்றார்.

திருமறைக்காட்டில் திருநாவுக்கரசர் கோவிலின் கதவைத் திறக்கப் பதிகம் பாடினார். அப்பதிகத்தில் இறைவியை,

**பண்ணின் நேரு மொழியாள்**

என்று குறிப்பிட்டுள்ளதைச் சேக்கிழார் தமது 1538வது பாடலில் கூறுகிறார். பின்னர் இறைவனை ஞானசம்பந்தரும், அப்பரும் போற்றிப் புகழ்ந்து பாடியதைப் **"பாடும் தமிழ் மாலைகள் கொண்டு..."** என்று தமது 1552வது பாடலில் கூறியுள்ளார்.

நாவுக்கரசர் பிறகு திருவண்ணாமலையில் உறையும் இறைவனைப் பண்ணோடு அமைந்த பாடல்கள் பாடி மகிழ்வித்தார். இதனைச் சேக்கிழார் தமது 1583 வது பாடலில் குறிப்பிட்டுள்ளார்கள். அப்பாடல் பின்வருமாறு:

**அண்ணா மலைமேல் அணிமலையை**
**ஆரா அன்பின் அடியவர்தம்**
**கண்ஆர் அமுதை விண்ணோரைக்**
**காக்கக் கடலில் வந்து எழுந்த**
**உண்ணா நஞ்சம் உண்டானைக்**
**கும்பிட்டு உருகும் சிந்தையுடன்**
**பண்ஆர் பதிகத் தமிழ் பாடிப்**
**பணிந்து பரவிப் பணி செய்தார்**

**"பண்ஆர் பதிகம்"** என்பது நாவுக்கரசர் பண்களில் நிறைந்த பதிகங்கள் பாடியதைக் குறிக்கும். நாவுக்கரசர் **"காந்தாரப் பஞ்சமம்"** போன்ற நெஞ்சை உருக்கும் பண்களில் பதிகங்கள் பாடியுள்ளார்.

பின்னர்த் திருமயிலை, திருவான்மியூர் போன்ற இறை உறைவிடங்களைப் பாடினார் நாவுக்கரசர். திருவொற்றியூரில் அவர் இறைவனை நோக்கித் திருத்தாண்டகம் பாடினார். அத்தாண்டகங்கள் பண் தோய்ந்தவையாக இருந்தன எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

**பண் தோய்ந்த சொல் திருத்தாண்டகம் பாடிப்**
**பரவுவார்**

**(பா.1606)**

ஒரு பொருளை ஒன்றில் தோய்த்து எடுத்தால், எதில் நாம் தோய்க்கிறோமோ, அது அப்பொருளோடு நன்கு சேர்ந்து கொள்ளும். இங்கு நாவுக்கரசர் சொற்களைப் பண்ணில் தோய்க்கிறார். எனவே, இனிய திருத்தாண்டகப் பாடல்களை அவரால் இயற்ற முடிந்தது எனக் கொள்ளலாம்.

திரு ஐயாற்றினில் அப்பர் பெருமான் பல்வேறு வகையான பாடல்களைப் புனைந்து இறைவனுக்கு அர்ப்பணித்தார். அதனைச்

சேக்கிழார் தமது 1655வது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

கண்டு தொழுது வணங்கிக்
கண்ணுதலார் தம்மைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள்
குறுந்தொகை நேரிசை அன்பில்
மண்டு விருத்தங்கள் பாடி
வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான் திருஐயாறு
அமர்ந்தனர் நாவுக் கரசர்

சேக்கிழார் பெருமான் இவ்வாறு பல அடியவர்களின் சரித்திரத்தை எடுத்து உரைத்துக் கொண்டு வரும்போது, அம்மையார் பாடிய பாடல்களை எடுத்துரைத்துள்ளார். காரைக்கால் அம்மையார்தான் முதன் முதலில் தமது பாடலில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்று ஏழிசைப் பெயர்கள் வருமாறு பாடியவர். அம்மையார் தமது பதிகங்களை நட்டபாடைப் பண்ணில் பாடியுள்ளார். அம்மையார் இறைவனை நோக்கிப் பாடல்கள் புனைந்ததைச் சேக்கிழார் தமது 1773 மற்றும 1774வது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல்கள் பின்வருமாறு:

உற்பவித்து எழுந்த ஞானத்து
ஒருமையின் உமைகோன் தன்னை
அற்புதத் திருவந் தாதி
அப்பொழுது அருளிச் செய்வார்
பொற்புஉடைச் செய்ய பாத
புண்டரீகங்கள் போற்றும்
நல்கணத்தினில் ஒன்று ஆனேன்
நான் என்று நயந்து பாடி (பா.1773)

ஆய்ந்தசீர் இரட்டைமாலை
அந்தாதி எடுத்துப்பாடி
ஏய்ந்த பேருணர்வு பொங்க
எயில் ஒரு மூன்றும் முன்நாள்
காய்ந்தவர் இருந்த வெள்ளிக்
கைலைமால் வரையை நண்ண
வாய்ந்தபேர் அருள்முன் கூர
வழிப்படும் வழியால் வந்தார் (பா.1774)

மேலும் மூத்த திருப்பதிகத்தைப் பாடியதை

...மூத்தநல் பதிகம்பாடி
ஞாலம் காதலித்துப் போற்றும்
நடம்போற்றி நண்ணும் நாளில் (பா.1784)

என்றும் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

அப்பூதி அடிகளின் கதையைத் தனித்துக் கூறுமிடத்தும், நாவுக்கரசர் "ஒன்று கொலாம்" என்ற பதிகத்தைப்பாடி அரவின் விடத்தைப் போக்கியதைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

தற்காலத்தில் "இசை ஒரு நல்ல மருந்து" என்று கருதி அறிஞர்கள் பல ஆய்வுகளை மேற்கொண்டு உள்ளனர். அக்காலத்திலேயே இசை அருமருந்தாக இருந்ததைச் சேக்கிழார் தமது 1822 பாடலில் குறிப்பிட்டுள்ளார். அவ்வரிகள் பின்வருமாறு:

நாவினுக் கரசர் கேளா
நன்று நீர் புரிந்த வண்ணம்
யாவர் இத்தன்மை செய்வார்
என்றுமுன் எழுந்து சென்றே
ஆவிதீர் சவத்தை நோக்கி
அண்ணலார் அருளும் வண்ணம்
பாஇசைப் பதிகம் பாடி
பணிவிடம் பாற்று வித்தார் (பா.1822)

திருத்தொண்டர் புராணத்தைப் "பிள்ளைபாதி புராணம் பாதி" என்று அறிஞர்கள் கூறுவர். ஏனெனில் திருத்தொண்டர் புராணத்தில் இரண்டில் ஒரு பகுதி ஞானசம்பந்தர் வரலாற்றை எடுத்தியம்பும் பாக்களால் அமைந்துள்ளது. ஞானசம்பந்தர் உலகிலேயே மிகக் குறைந்த வயதில் இசைப் பாடல்களைப் புனைந்தவர். உமையம்மை அளித்த அமுதப்பாலைப் பருகித் தமது மூன்றாவது வயதில் நட்டபாடைப் பண்ணில் அமைந்த "தோடுடைய செவியன்" என்ற பாடல் இயற்றினார். திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் பெருமான் தமது 1977, 1978 மற்றும் 1979வது பாடல்களில் இச்சம்பவத்தினை எடுத்துரைத்துள்ளார். அப்பாடல்கள் பின்வருமாறு

விண்நிறைந்த பெருகு ஒளியால் விளங்கு
மழவிடைமேலே
பண் நிறைந்த அருமறைகள் பணிந்து ஏத்தப்
பாவையுடன்
எண் நிறைந்த கருணையினால் நின்றாரை எதிர்காட்டி
உள்நிறைந்து பொழிந்து எழுந்த உயர்ஞானத்
திருமொழியில்

**எல்லைஇலா மறைமுதல் மெய்யுடன் எடுத்த எழுது மறை**
**மல்லல்நெடுந் தமிழால்இம் மாநிலத்தோர்க்கு உரைசிறப்பப்**
**பல்உயிரும் களிகூரத் தம்பாடல் பரமர்பால்**
**செல்லும்முறை பெறுவதற்குத் திருச்செவியைச்சிறப்பித்து**

**செம்மை பெற எடுத்த திருத்தோடுடைய செவியன் எனும்**
**மெய்ம்மை மொழித் திருப்பதிகம் பிரமபுரம் மேவினார்**
**தம்மைஅடை யாளங்களுடன் சாற்றித் தாதையார்க்கு**
**எம்மைஇது செய்தபிரான் இவன்அன்றே என இசைத்தார்**
**(பா. 1977, 1978, 1979)**

ஈசன் இன்னிசையால் மகிழ்பவன். எனவே இசைப் பாக்களை ஈசனை நினைத்தே சம்பந்தர் புனைந்தார். அதனைச் சேக்கிழார் தமது 1992வது பாடலில் குறிப்பிடுகின்றார்.

**இன்னிசை ஏழும் இசைந்த செழுந்தமிழ் ஈசற்கே**

**"ஏழிசை"** என்பது ஈண்டு ஏழு சுரங்களைக் குறிக்கும். இறைவனிடத்துத்தான் ஏழிசையும் தோன்றின. எனவேதான் இறைவனை அடியார்கள் "ஏழிசையாய் இசைப் பயனாய்" என்று கூறுகிறார்கள்.

இறைவியைச் சேக்கிழார் **"ஏழிசை மொழியாள்"** என்று தமது 1994வது பாடலில் குறிப்பிடுகின்றார். தமது 1996வது பாடலில் **"பண்இயல்"** பற்றிக் குறிப்பிடுகின்றார். **"பண்"** என்பது பொதுவாக ஏழிசைகளும் பொருந்திய ஒன்றாகும். **"பண்இயல்"** என்பது ஆறு இசைகளைக் கொண்ட ஒன்று. இது **"பண்இயல் திறம்"** என்றும் குறிப்பிடப்படும். **"பழந்தக்கராகம்"** ஒரு பண்இயல் திறம் ஆகும். பண்பற்றியும், திறம்பற்றியும் விரிவாக எடுத்துரைக்கும் சேக்கிழார் பெருமானின் இசை அறிவு மிக நுட்பமான ஒன்று என்று இதனின்று நாம் அறியலாம்.

ஞானசம்பந்தர் திருக்கோலக்கா எய்தித் தேவர்பிரான் கோவில் வலம் வந்து பொற்றாளம் பெற்றார். அத்தாளத்திற்கு இறைவி ஓசை நல்கியதால் **"ஓசை நாயகி"** என்று இன்றளவும் அடியார்கள் அவளை வணங்குகிறார்கள். இதனைச் சுந்தரர்

**நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்**
**ஞானசம்பந் தனுக்குல கவர்முன்**
**தாளம் ஈந்தவன் பாடலுக்கிரங்கும் தம்மையாளனை**

என்று குறிப்பிடுகின்றார்.

தாளம் பெற்றுப் பதிகம் பாடியதைச் சேக்கிழார் தமது 2007வது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**காழிவரும் பெருந்தகையார் கையில்வரும்**
**திருத்தாளக் கருவி கண்டு**
**வாழியதம் திருமுடிமேல் கொண்டு அருளி**
**மனம்களிப்ப மதுர வாயில்**
**ஏழிசையும் தழைத்து ஓங்க இன்னிசைவண்**
**தமிழ்ப் பதிகம் எய்தப் பாடித்**
**தாழுமணிக் குழையார்முன் தக்கதிருக்**
**கடைக்காப்பு சாத்தி நின்றார்**

**"திருக்கடைக்காப்பு"** என்பது பத்துப் பாடல்களில் இறுதியாக அமைந்த ஒன்றாகும். இதில் பொதுவாக இயற்றியவரின் பெயர் வருவது உண்டு.

இசைத் தெய்வங்களான தும்புரு, நாரதர் முதலானவர்களைச் சம்பந்தர் பாடியதை

**உம்பர் உலகு அதிசயிப்ப ஓங்கியநா**
**தத்து தளவின் உண்மை நோக்கித்**
**தும்புரு நாரதர் முதல் ஆம் சுருதி இசைத்**
**துறை உள்ளோர் துதித்து மண்மேல் ...**
**(பா. 2008)**

என்று சேக்கிழார் போற்றியுள்ளார். மேலும் சுந்தரரின் பாடல் தாளத்தோடு அமைந்ததை அவர்

**எடுத்த திருப்பதிகத்தின் இசைதிருத்**
**தாளத்தினால் இசையை ஒற்றி ... (பா.2011)**

என்று குறிப்பிடுகிறார்.

திருஞானசம்பந்தர் ஏழிசையும் சிறப்புப் பெறத் திருப்பதிகம் பாடியதை

**... ஏழிசையும் ஓங்க எடுத்தார் எமை ஆளும்**
**காழியர்தம் காவலனார் கற்றாங்கெரி ஓம்பி"**
**(பா.2065)**

**பண்ஆர் பதிகத் திருக்கடைக் காப்புப் பரவி ...**
**(பா.2066)**

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

தில்லையம்பதியில் ஞானசம்பந்தர் பதிகம் பாடியபோது அவருக்கு இசைவாகத் திருநீலகண்டயாழ்ப்பாணர் யாழ் இசைத்தார். அதனைச் சேக்கிழார்:

**பாடும் பதிக இசை யாழ்ப்பாணரும் பயிற்றி... (பா.2071)**

என்று குறிப்பிடுகின்றார்.

இறைவனை நோக்கிக் கண்ணீர் மல்கி ஏழிசையோடு கூடிய பதிகங்கள் பலவற்றைத் திருஅரத்துறையில் சம்பந்தர் பாடி அருளினார். அதனைச் சேக்கிழார் மிக அழகாகத் தமது 2130வது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**சூடினார்கர கமலங்கள் சொரிந்துஇழி கண்ணீர்**
**ஆடினார் திருமேனியில் அரத்துறை விரும்பி**
**நீடினார் திருஅருள் பெருங்கருணையே நிகழப்**
**பாடினார் திருப்பதிகம் ஏழ்இசையொடும் பயில**
**(பா.2130)**

இப்பாடலில், சிவபெருமானைப் புகழ்ந்து, **"ஏழிசை"** என்ற ஏழு கோவை நிலைகளும் அவற்றின் நிரல் மாறாமல் அமைத்து, நற்றமிழில் திருக்கடைக்காப்பு பாடப்பட்டதாகக் குறிப்பு கிடைக்கின்றது.

2140வது பாடலில் **"மலையர்"** என்று கூறப்படும் திருஞானசம்பந்தர் பண்கள் சிறக்கத் திருப்பதிகம் பாடியதைச் சேக்கிழார் எடுத்துரைத்துள்ளார். அவ்வரிகள் பின்வருமாறு:

**... நண்ணிய வகை சிறப்பித்து நாதரைப்**
**பண்ணினில் திகழ் திருப்பதிகம் பாடினார் (பா.2140)**

இசைப்பாடல்களைச் சம்பந்தர் பாடியதை

**பாவினது இசைவழிபாடி அங்கு அகன்ற ... (பா.2141)**

என்று சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் **"புறநீர்மைப் பண்ணில்"** சம்பந்தர் பாடியதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**புறம்பயத்து இறைவரை வணங்கிப் போற்றிசெய்**
**திறம்புரி நீர்மையில் பதிகச் செந்தமிழ்**
**நிறம்பயில் இசையுடன் பாடி நீடிய**
**அறம்திரு கொள்கையார் அமர்ந்து மேவினார்**
**(பா.2144)**

**"புறநீர்மை"** என்பதனைச் சிலர் தற்காலத்தில் **"பூபாளம்"** என்ற இராகத்திற்கும் சிலர் **"பௌளி"** என்ற இராகத்திற்கும் ஒப்பாகக் கூறுகின்றனர். **"புறநீர்மை"** என்பது ஒரு திறம் ஆகும். **"திறம்"** என்பது ஐந்திசை கொண்ட இராகமாகும். ஞானசம்பந்தர் **"மங்கையர்க்கரசி"** போன்ற பாடல்களைப் புறநீர்மைப் பண்ணில்

புனைந்துள்ளார். மேற்கண்ட பாடலில் **"நிறம் பயில்"** என்ற குறிப்பு வருகிறது. **"நிறம் பயில்"** என்றால் **"வண்ணம் பயில்"** என்று பொருள். **"வண்ணம்"** என்பது பாடல்களில் அமைந்துள்ள சந்தங்களைக் குறிக்கும். சம்பந்தர் வண்ணம் அமைந்த பாக்களைப் பாடியதைச் சேக்கிழார் பெருமான் இங்குக் குறிப்பிடுகின்றார்.

திருப்பனந்தாளில் இறைவனைப் பாடி ஏத்திய சம்பந்தர் பின்பு ஓமாம்புலியூரிலும், வடதளியிலும் இறைவனைப் பாடினார். சமபந்தர் பாடிய பதிகங்கள் உலகம் உள்ளளவும் புகழ் பெற்றவையாக இருக்கும் என்பதனைச் சேக்கிழார்,

**... பார்புகழ் பதிகங்கள் பாடி நீடுவார் (பா.2155)**

என்று குறிப்பிடுகின்றார்.

ஞானசம்பந்தர் நான்கு மறைகளிலும் கூறப்பட்டுள்ள உண்மைப் பொருளைத் தமது அருந்தமிழ்ப் பதிகங்களில் அமைத்துப்பாடினார். இதனைச் சேக்கிழார்

**...தங்கள் திருமுன்பு தாழ்ந்து எழுந்து நின்று**
**தமிழ்வேதம் பாடினார் தாளம் பெற்றார் (பா.2163)**

என்று மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

தாளங்களில் **"தூக்கு"** என்ற ஒன்று உண்டு. ஒருசீர் செந்தூக்கு. இருசீர் மதலை. முச்சீர் துணிவு. நாச்சீர் கோயில். ஐஞ்சீர் நிவப்பு. அறுசீர் கழல். எழுசீர் நெடுந்தூக்கு. இவ்வாறு ஏழுவகைப்பட்ட தூக்குகளிலும் அமைந்த பாடல்களைக் காழியூர்ப் பிள்ளையார் பாடியுள்ளார். அதனைச் சேக்கிழார் தமது பாடலில் குறித்துள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**வாக்கின் தனிமன்னர் ஏக**
**மாறாத் திரு உளத்தோடும்**
**பூக்கமழும் பண்ணை சூழ்ந்த**
**புகலியன் மீண்டும் புகுந்து**
**தக்கிய மாமறை வெள்ளத்**
**திருத்தோணி வீற்றிருந் தாரைத்**
**தூக்கின் தமிழ்மாலை பாடித்**
**தொழுது அங்கு உறைகின்ற நாளில் (பா.2178)**

ஞானசம்பந்தர் பல்வகைப் பாடல்களைப் பாடியதைச் சேக்கிழார் தமது 2179 மற்றும் 2180வது பாடல்களில் குறிப்பிடுகின்றார். அப்பாடல்கள் பின்வருமாறு:

**செந்தமிழ் மாலை விகற்பச்**
**செய்யுள்களான் மொழி மாற்றும்**
**வந்தசொல் சீர் மாலை மாற்றும்**
**வழிமொழி எல்லா மடக்கும்**
**சந்த இயமகம் ஏகபாதம்**
**தமிழ் இருக்குக் குறள் சாத்தி**
**எந்தைக்கு எழுகூற்று இருக்கை**
**ஈரடி ஈரடி வைப்பு** **(பா.2179)**

**நாலடி மேல் வைப்பு மேன்மை**
**நடையின் முடுகும் இராகம்**
**சால்பினில் சக்கரம் ஆதி**
**விகற்பங்கள் சாற்றும் பதிகம்**
**மூல இலக்கியம் ஆக**
**எல்லாப் பொருள்களும் முற்ற**
**ஞாலத்து உயர் காழியாரைப்**
**பாடினார் ஞானசம்பந்தர்** **(பா.2180)**

ஞானசம்பந்தர் **"நாலடிமேல் வைப்பாகப்"** பல பாடல்களைப் புனைந்துள்ளார். இப்பாடல்கள்தாம் தற்காலத்தில் கீர்த்தனைகளுக்கு முன்னோடி எனக் கருதப்படுகின்றன. ஞானசம்பந்தரின் கீழ்க்கண்ட பாடல் **"நாலடிமேல் வைப்பு"** என்ற அமைப்பிற்கு எடுத்துக் காட்டாகும்.

**பண்: காந்தாரப் பஞ்சமம்** **3ஆம் திருமுறை**

**இயலிசை யெனும்பொரு ளில்திறமாம்**
**புயலன மிடறுடைப் புண்ணியனே**
**கயலன அரிநெடுங் கண்ணியொடும்**
**அயலுல கடிதொழ அமர்ந்தவனே**

**கலனாவது வெண்டலை, கடிபொழிற் புகலிதன்னுள்**
**நிலனாள்தொறும் இன்புற நிறைமதி யருளினனே**

சம்பந்தப் பெருமான் 'திருவிராகம்' என்ற வகையைச் சேர்ந்த பாடல்களைப் பாடியுள்ளார். அதற்கு எடுத்துக்காட்டாகக் கீழ்க்கண்ட பாடலைக் கூறலாம்.

**பண்: சாதாரி** **3ஆம் திருமுறை**

**சங்கமரு முன்கைமட மாதையொரு பாலுடன் விரும்பி**
**அங்கமுடல் மேலுறவ ணிந்துபிணி தீர அருள்செய்யும்**
**எங்கள் பெருமானிடமெ னத்தகு னைக்கடலின் முத்தற்**
**துங்கமணி இப்பிகள்க ரைக்குவரு தோணிபுரமாமே**

ஞானசம்பந்தர் **“ஏகபாதமாகப்”** பல பாடல்களை இயற்றியுள்ளார். அவற்றில் ஒரு பாடல் பின்வருமாறு :

**பண்: வியாழக் குறிஞ்சி 1ஆம் திருமுறை**

**பிரமபுரத்துறை பெம்மா னெம்மான்**
**பிரமபுரத்துறை பெம்மா னெம்மான்**
**பிரமபுரத்துறை பெம்மா னெம்மான்**
**பிரமபுரத்துறை பெம்மா னெம்மான்**

ஞானசம்பந்தர் **“திருவெழுகூற்றிருக்கை”** என்ற வகையைச் சார்ந்த பாடல்களைப் பாடியுள்ளதைச் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். அவற்றில் ஒருபாடலை நாம் எடுத்துக்காட்டாகப் பார்க்கலாம்.

**பண்: வியாழக்குறிஞ்சி 1ஆம் திருமுறை**

**ஒரு வாயினை மானாங்காரத்**
**திரியல் பாயொரு விண்முதல் பூதலம்**
**ஒன்றிய இருகூடர் உம்பர்கள் பிறவும்**
**படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை**
**இருவரோடொருவ னாகி நின்றனை**

**“ஈரடி”**யாகப் பல பாடல்களைச் சம்பந்தர் புனைந்துள்ளார்.

அவற்றில் ஒருபாடல் பின்வருமாறு :

**பண்: பழம்பஞ்சரம் 3ஆம் திருமுறை**

**துங்கமாகரி பங்கவாவடுஞ் செங்கையானிகழ்**
**வெங்குருத்திகழ்**
**அங்கணான்அடி தங்கையால் தொழத் தங்குமோ**
**வினையே**

**“திருவியமகம்”** என்ற வகையைச் சேர்ந்த பல பாடல்களைச் சம்பந்தர் புனைந்துள்ளார். அவற்றில் ஒரு பாடல் பின்வருமாறு :

**பண்: பழம் பஞ்சுரம் 3ஆம் திருமுறை**

**உற்றுமை சேர்வது மெய்யினயே**
**உணர்வது நின்னருள் மெய்யினையே**
**கற்றவர் காய்வது காமனையே**
**கனல்விழி காய்பது காமனையே**
**அற்றம் மறைப்பதும் உன் பணியே**
**அமரர்கள் செய்வதும் உன் பணியே**
**பெற்றும் உகந்தது கந்தனையே**
**பிரம புரத்தை உகந்தனையே**

இவ்வாறு, சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ள பலவகை இசைப் பாடல்களைக் காழியூர்ப் பிள்ளையார் பாடியுள்ளார்.

திரு ஐயாறில் சம்பந்தர் பதிகம் பாடியதை

... புந்தி நிறை செந்தமிழின் சந்த இசை
போற்றி சைத்தார் புகலி வேந்தர் (பா.2204)

என்று சேக்கிழார் கூறியுள்ளார்.

பின்னர், திருச்சிராப்பள்ளியை அடைந்து இறைவனைக் காழிப் பிள்ளையார் பாடியதை

பண் உறு செந்தமிழ் மாலைபாடிப்
பரவி நின்று ஏத்தினர் பான்மையினால் (பா.2248)

என்று குறிப்பிடுகின்றார்.

திருச்சத்தி முற்றத்தில் இறைவனைச் சம்பந்தர் பாடியதைச் சேக்கிழார் கீழ்க்கண்டவாறு எடுத்துரைக்கிறார்:

வண்தமிழின் மொழிவிரகர்
மணிமுத்தின் சிவிகையினைத்
தொண்டர் குழாத்துஎதிர் இழிந்து அங்கு
அவர் தொழத் தாமும் தொழுதே
அண்டர்பிரான் கோயிலினை
அணைந்து இறைஞ்சி முன்நின்று
பண்தரும் இன் இசைப்பதிகம்
பரம் பொருளைப் பாடு வார் (பா.2304)

சம்பந்தரைச் சேக்கிழார் "வண்தமிழின் மொழி விரகர்", என்று கூறுகிறார். இதனால் சம்பந்தரின் தீவிரத் தமிழ்ப் பற்று வெளிப்படுகிறது. பண்களால்தாம் இன்னிசை பிறக்கின்றது. அவற்றில் சம்பந்தர் பதிகம் பாடியதால் "பண் தரும் இன்னிசைப் பதிகம்" என்று சேக்கிழார் கூறுகின்றார்.

குடந்தை இறைவனைக் காழிப்பிரான் பாடியதை

...பண் ஆர்ந்த திருப்பதிகம்
பணிந்து ஏத்தி ... (பா.2313)

என்றும் திருநாகேச்சரத்து இறைவனைப் பாடியதை

ஓங்கு திருப்பதிகம் ஓடே ...
பாங்கு உடைய இன்இசையால்
பாடி எழுந்தருளினார் (பா.2316)

என்றும் சேக்கிழார் பாடியுள்ளார்.

திருஆவடுதுறை இறைவனைச் சம்பந்தர் பாடியதை

**எடுத்த வண் தமிழ்ப் பதிகம் நாலடியின் மேல் இருசீர்**
**தொடுத்த வைப்பொடு தொடர்ந்த இன்இசையினால்**
**துதிப்பார்... (பா.2328)**

என்றும்

**நச்சி இன்தமிழ் பாடிய ஞானசம்பந்தர்... (பா.2329)**

என்றும் சேக்கிழார் கூறுகிறார்.

தருமபுரத்தை அடைந்த ஞானசம்பந்தர் மிக அரிதான பதிகங்களைப் பாடினார். திருநீலகண்ட யாழ்ப்பாணரால் அப்பதிகங்களைத் தமது யாழில் வாசிக்க இயலவில்லை. அந்நிகழ்வினைச் சேக்கிழார் தமது பாடல்களில் விளக்கியுள்ளார். சம்பந்தர் "மாதர் மடப்பிடியும்" என்று பதிகம் பாடியதைக் கீழ்க்காணும் பாடலிலே சுட்டுகிறார் :

**வேதநெறி வளர்ப்பவரும் விடையவர் முன்**
**தொழுது திருப்பதிகத் துண்மை**
**பூதலத்தோர் கண்டத்தும் கலத்தினிலும்**
**நிலத்து நூல் புகன்ற பேத**
**நாத இசை முயற்சிகளால் அடங்காத**
**வகை காட்ட நாட்டுகின்றார்**
**மாதர் மடப் பிடிபாடி வணங்கினார்**
**வானவரும் வணங்கி ஏத்த (பா.2350)**

சம்பந்தர் பாடியது 'யாழ்முரி' என்பதையும் சேக்கிழார் கூறுகிர். அப்பாடல் பின்வருமாறு :

**ஐயர் நீர் யாழ்இதனை முரிக்கும் அதுஎன்**
**ஆளுடையாள் உடனே கூடச்**
**செய்ய சடையார் அளித்த திருவருளின்**
**பெருமை எலாம் தெரிய நம்பால்**
**எய்தியகிக் கருவியினில் அளவுபடுமோ**
**நம்தம் இயல்புக்கு ஏற்ப**
**வையகத்தோர் அறிவுறஇக் கருவி**
**அளவையின் இயற்றல் வழக்கே என்றார்**
**(பா.2354)**

ஞானசம்பந்தர் திருப்புகலூர் இறைவனைப் பாடித்தொழுதார். அதனைச் சேக்கிழார் பின்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

**புக்கு எதிர் தாழ்ந்து விழுந்து எழுந்து**
**பூம்புகலூர் மன்னு புண்ணியரை**

நெக்கு உருகும் சிந்தை அன்பு பொங்க
நிறை மலர்க் கண்ணீர் அருவிசெய்ய
மிக்க தமிழ்த்தொடை மாலை சாத்தி
மேவிய ஏழிசை பாடிப்போந்து
திக்கு நிறைசீர் முருகர் முன்பு
செல்ல அவர்மடம் சென்று புக்கார் (பா.2393)

"மேவிய ஏழிசை" என்று குறிப்பிடுவதால் ஏழிசையும் அவற்றிலிருந்து பிறக்கும் பண்களும் சம்பந்தருக்கு இயல்பாகவே வருபவை என்பது நமக்குப் புலனாகிறது.

திருவாரூரில் ஞானசம்பந்தர் தியாகராசப் பெருமானைப் பல பதிகங்களால் தொழுது ஏத்தினார். அதனைச் சேக்கிழார் தமது பாடல்களில் கூறியுள்ளார்.

தேவர்தம் தலைவனார் கோயில்புக்கு அனைவரும்
சீர்நிலத் துஉற வணங்கிப்
பாவரும் தமிழிசைப் பதிகமும் பாடிமுன்
பரவுவார் பறம்பு அணைந்தே ... (பா.2425)

என்று குறிப்பிடுகின்றார். திருப்பாம்புரத்தில் சம்பந்தர் இறைவனைப் பாடியதை:

பாம்புரத்து உறை பரமரைப்
பணிந்து நல்பதிக இன்இசைபாடி ... பா.2441)

என்று சேக்கிழார் கூறியுள்ளார்.

ஞானசம்பந்தர் திருவீழிமிழலையில் இறைவனைப் போற்றிப் "பண்ஆர் பதிகம்" பாடியதைப் பின்வரும் பாடலில் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்:

போற்றிச் சடையார் புனலுடையான் என்று எடுத்துச்
சாற்றிப் பதிகத் தமிழ்மாலைச் சந்த இசை
ஆற்றமிகப் பாடி ஆனந்த வெள்ளத்தில்
நீற்று அழகர் சேவடிக்கீழ் நின்று அலைந்து நீடினார்
(பா.2448)

'சந்த இசை' என்று குறிப்பிட்டுள்ளமையால், பாடல்கள் சந்தத்துடன் புனையப்பட்டன என்ற செய்தி நமக்குக் கிடைக்கின்றது.

இறைவி நாதவடிவானவள். அவளிடம் ஞானப்பால் பருகியதால் சம்பந்தருக்கு மிகுந்த இசை ஞானம் ஏற்பட்டது. இதனைச் சேக்கிழார்

... பண் அமரும் மொழி உமையாள் முலையின் ஞானப்
பாலறா வாயருடன் அரசும் பார்மேல் .... (பா.2465)

என்று குறிப்பிடுகின்றார்.

பதிகம் என்பது பத்துப் பாடல்களைக் கொண்ட ஒரு தொகுப்பாகும். இதில் இறுதிப்பாடலாகத் திருக்கடைக்காப்பு வரும். இதனைச் சேக்கிழார்

பாடிய அப்பதிகப் பாட்டான பத்தும்
பாடல் நிரம்பிய பின்னும் பைம்பொன் வாயில்
சேடு உயர் பொன்கதவு திருக்காப்பு நீங்காச்
செய்கையினால் வாகீசர் சிந்தை நொந்து
நீடு திருக்கடைக்காப்பில் அரிது வேண்டி...
(பா.2485)

என்று குறிப்பிடுகின்றார். நாதவடிவானவன் இறைவன் என்பதைச் சேக்கிழார்

...நாதங்கொள் வடிவாய் நின்ற
நதிபொதி சடையார் செய்ய
பாதங்கள் போற்றும் மேலோர்
'பெருமையார் பகரும் நீரார் (பா.2494)

என்று குறிப்பிடுகின்றார்.

திருமறைக்காட்டு இறைவனைப் பண்ணோடு இணைந்த பதிகம் பாடியதை,

சண்பை நாடுடைய பிள்ளை
தமிழ்மொழித் தலைவரோடு
மண்பயில் கீர்த்திச் செல்வ
மாமறைக்காட்டு வைகிக்
கண்பயில் நெற்றியார் தம்
கழலிணை பணிந்து போற்றிப்
பண்பயில் பதிகம் பாடிப்
பரவி அங்கு இருந்தார் அன்றே (பா .2501)

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

திருக்கடிக்குளம் என்னும் திருப்பதியைப் பாடியதையும்

... பண் ஆர்ந்த தமிழ் பாடிப் பரவியே செல்கின்றார் ...
(பா.2526)

என்று குறிப்பிட்டுள்ளார். ஞானசம்பந்தர் "புறநீர்மைப் பண்ணில்" கீழ்க்கண்ட பாடலைப் பாடியுள்ளார்.

**மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை**
**வரிவளைக் கைமட மானி**
**பங்கயச் செல்வி பாண்டிமாதேவி**
**பணிசெய்து நாடொறும் பரவ**
**பொங்கழல் உருவன் பூதநாயகன்நால்**
**வேதமும் பொருள்களும் அருளி**
**அங்கயற்கண்ணி தன்னொடு மமர்ந்த**
**ஆலவா யாவதும் இதுவே.**

இப்பதிகத்தினைச் சம்பந்தர் பாடியதைச் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**... மங்கயர்க்கரசி என்று எடுத்தே**
**எண்திசை பரவும் ஆலவாய் ஆவது**

**இதுவே என்று இருவர்தம் பணியும்**
**கொண்டமை சிறப்பித்து அருளிநல் பதிகம்**
**பாடினார் குவலயம் போற்ற (பா.2566)**

பாண்டிமாதேவி தனது அரசரின் வெற்பு நோய் தீர்ப்பதற்காக ஞானசம்பந்தரைக் காணவந்தார். அவர் கண்டது, ஏழிசைகள் எங்கிருந்து பிறந்தனவோ அந்தப் பிரணவ வடிவான, ஞானக் குழந்தையை, என்று சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை**
**வானத்தின் மிசைஅன்றி மண்ணில்வளர்மதிக் கொழுந்தைத்**
**தேன்நக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்**
**கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்**
**(பா.2631)**

திருஞானசம்பந்தர் தவத்தால் பிள்ளைமைப் பேறெய்தியவர். சிவநாமம் சமணத்துக்கும் சைவத்துக்கும் பொதுவானது. சைவத்தில் சிவனை உமையொரு பாகனாக வழிபடுவார்கள். ஆண்டவன் பெண்ணோடு கூடியுள்ள பெருந்தகை என்பதும் பொதுளவே சம்பந்தர் திருப்பதிகங்கள் பாடி அருளினார். சமணருடன் வாது செய்யும் சம்பந்தர், அத்தகைய பதிகங்களைப் பாடி ஓலைகளை நீரிலும், நெருப்பிலும் இட்டனர். சமணரும் தம் பாடல்களைச் செந்தீயிலும், நீரிலும் இட்டனர். நெருப்பிலும் நீரிலும் சம்பந்தர் தம்

பாடல்கள் திரும்பக் கிடைக்கப்பெற்று வென்றார். இதனைச் சேக்கிழார் மிகவும் விரிவாகக் கூறியுள்ளார். மேலும் சம்பந்தரின் பாடல்களை, அவர், "மிக உயர்வாக உள்ளன" என்று

**...பாசுரம் பாடலுற்றார்**
**பரசமயங்கள் பாற (பா.2721)**

என்று சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும்

**... ஏற்று உயர் கொடியினாரைப்**
**பாடினார் ஏடுதங்க (பா.2751)**

என்றும் குறிப்பிடுகின்றார்.

காரைக்கால் அருகில் சென்று அப்பதியிலே கால் வைக்கத் தயங்கிய சம்பந்தர் அப்பதியில் இரவு தங்கியிருந்தபோது கனவிலே இறைவனைக் கண்டு பாடினார். அதனைப் "பழம்பஞ்சுரம்" என்ற பண்ணிலே பாடினார். அதனைச் சேக்கிழார் கீழ்க்கண்ட பாடலில் குறிப்பிட்டுள்ளார்

**துஞ்சவருவார் என்றே எடுத்த ஓசைச்**
**சுருதிமுறை வழுவாமல் தொடுத்த பாடல்**
**எஞ்சல்இலா வகைமுறையே பழையனூரார்**
**இயம்புமொழி காத்தகதை சிறப்பித்து ஏத்தி**
**அஞ்சனமா கரிஉரித்தார் அருள்ஆம் என்றே**
**அறியும்வகை திருக்கடைக்காப்பு**
**அமையச்சாத்திப்**
**பஞ்சுரமாம் பழையதிறம் கிழமைகொள்ளப்**
**பாடினார் பார்எல்லாம் உய்ய வந்தார்**
**(பா.2913)**

"பஞ்சுரம்", "பழம்பஞ்சுரம்" போன்ற சொற்கள் தற்காலத்திய "**சங்கராபரண**" இராகத்தினைக் குறிப்பவை ஆகும். இதனிடையே ஏழிசையும் உள்ளன. இவ்வாறு சிறந்த பதிகத்தினைப் பாடி இறைவனைச் சம்பந்தர் போற்றியதைச் சேக்கிழார் தமது 2914 மற்றும் 2916 பாடல்களில் கூறியுள்ளார். அவ்வரிகள் பின்வருமாறு:

**நீடும் இசைத் திருப்பதிகம் பாடிப் போற்றி (பா.2914)**

**மன்னு திருப் பதிகஇசை பாடிப் போற்றி (பா.2916)**

அடுத்து ஞானசம்பந்தர், திருக்கண்ணப்பர் என்னும் அடிகளார் வாழ்ந்த திருக்காளத்தி என்னும் சிறப்புமிக்க இடத்திற்கு வந்து சேர்ந்தது பாடல் மூலம் விளக்கப்பட்டுள்ளது. அப்பாடல் பின்வருமாறு :

**திருந்திய இன் இசை வகுப்பத் திருக்கண்ணப்பர்**
**திருத்தொண்டு சிறப்பித்துத் திகழப் பாடிப்**
**பொருந்து பெருந் தவர் கூட்டம் போற்ற வந்து**
**பொன் முகலிக் கரை அணைந்துதொழுது**
**போகி**
**அருந்தவர்கள் எம்மருங்கும் மிடைந்து செல்ல**
**ஆளுடைய பிள்ளையார் அயன்மால்தேடும்**
**மருந்து வெளியே இருந்த திருக்காளத்தி**
**மலைஅடிவாரம் சார வந்து தாழ்ந்தார்**
**(பா.2924)**

'இன் இசை வகுப்பு' என்று இங்குக் கூறப்பட்டுள்ளது. இனிய இசையால் ஆன பல்வேறு வகையைச் சார்ந்த பாடல்களால் கண்ணப்பரின் திருத்தொண்டுகள் புகழ்ந்து பாடப்பட்டன என்று இங்கு நாம் கொள்ளலாம்.

மேலும் புகலிவேந்தர் பாடியது தமிழிசை என்பதனை மிக அழகாகச் சேக்கிழார் எடுத்துரைத்துள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**அங்கண்வட திசைமேலும் குடக்கின்மேலும்**
**அருந்தமிழின் வழக்கு அங்கு நிகழாது ஆகத்**
**திங்கள்புனை முடியார் தம் தானம் தோறும்**
**சென்று தமிழ் இசை பாடும் செய்கைபோல...**
**(பா.2929)**

ஞானசம்பந்தர் இறைஞ்சிபுரம் அடைந்து அங்குள்ள இறைவனைப் பாடினார். பின்பு திருக்கழுக்குன்றத்தைச் சென்று அடைந்தார். இதனைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**நிறைந்து ஆரா வேட்கையினால்**
**நின்று இறைஞ்சிப் புறம்போந்து அங்கு**
**உறைந்தருளிப் பணிகின்றார்**
**உமைபாகர் அருள்பெற்றுச்**
**சிறந்த திருத் தொண்டருடன்**
**எழுந்தருளிச் செந்துருத்தி**
**அறைந்து அளிகள் பயில்சாரல்**
**திருக்கழுக்குன்றினை அணைந்தார் (பா.3032)**

இப்பாடலில் ஞானசம்பந்தர் **"செந்துருத்திப்"** பண்ணில் பாடியதாகக் குறிப்பு உள்ளது. நமக்குக் கிடைத்துள்ள தேவாரப் பாடல்களில் சுந்தரர் பாடிய பாடல்களில்தாம் "செந்துருத்திப் பண்" காணப்படுகிறது. எனவே, சம்பந்தர் பாடிய பல பாடல்கள் நமக்குக் கிடைக்கப் பெறவில்லை என்பதற்கு இப்பாடலையே நாம் சான்றாகக் கொள்ளலாம்.

ஞானசம்பந்தர் அச்சிறுப்பாக்கத்து இறைவனைப் பாடியதைச் சேக்கிழார்

**ஆதிமுதல்வரை வணங்கி**
**ஆட்சி கொண்டார் எனமொழியும்**
**கோதுஇல் திருப்பதிக இசை**
**குலாவிய பாடலின் போற்றி ... (பா.3036)**

எனக் குறிப்பிடுகின்றார். சேக்கிழார் சம்பந்தரை

**அருந்தமிழாகரர் சரிதை**
**அடியேனுக்கு அவர்பாதம்**
**தரும்பரிசால் அறிந்தபடி**
**துதிசெய்தேன் தாரணிமேல் ... (பா.3159)**

என்று போற்றிப் பாடியுள்ளார்.

இறைவன் சம்பந்தர், நாவுக்கரசர் ஆகியோர் பாடல்களில் மகிழ்ந்ததை

**நன்று மகிழும் சம்பந்தர்**
**நாவுக்கரசர் பாட்டு உகந்தீர்... (பா.3203)**

என்று கூறுகின்றார்.

இவ்வாறு எண்ணிறந்த பாடல்களில் பண் பற்றிய குறிப்புகளும், **"தமிழிசைப் பாடல்கள்"** பற்றிய குறிப்புகளும், நமக்குக் கிடைக்குமாறு சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தைப் பாடியுள்ளார்.

ஆலால சுந்தரர் ஏழிசை நிறைந்த திருப்பதிகத்தைப் பாடினார் என்பதை

**... ஏழ் இசை திருப்பதிகம் இவ்**
**வுலகினில் ஏற்றிட ஏறி முன்னீர் ... (பா.4284)**

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

எண்ணிறந்த பாடல்களில் தமிழ் இசை பற்றியும், ஏழிசை பற்றியும், பண் பற்றியும் சேக்கிழார் குறிப்புகள் வழங்கியுள்ளமையால் அவர் ஒரு தேர்ந்த தமிழிசைப் புலவர் என்பது நமக்குப் புலனாகிறது. இவ்வாறு இசை பற்றிய குறிப்புகள் வழங்கியதோடு நில்லாமல் அவர் பல்வேறு இசைக் கருவிகள் பற்றிய செய்திகளையும் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். அவற்றினை அடுத்த இயலில் சற்று ஆய்வு செய்வோம்.

# சேக்கிழார் குறிப்பிட்டுள்ள இசைக் கருவிகளைப் பற்றிய செய்திகள்

சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் பல்வேறு இசைக்கருவிகளைக் குறிப்பிட்டுள்ளார். இக்கருவிகள் தெய்வ வழிபாட்டின் போதும், திருவிழாக் காலங்களின் போதும், திருமணத்தின் போதும் இசைக்கப்பட்டுள்ளன. இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள இசைக்கருவிகளில் அனைத்து வகையான இசைக் கருவிகளும் இடம் பெறுகின்றன. அதாவது தோல், துளை, நரம்பு, கஞ்சக் கருவி போன்ற பிரிவுகளில் அனைத்து வகையான இசைக்கருவிகளும் அடங்குகின்றன. இவை அனைத்தும் இடம் பெற்றதற்கான சான்றுகள் தடுத்தாட்கொண்ட புராணத்தில் வரும் பாடல்களிலேயே நமக்குக் கிடைக்கின்றன. முதலில் பொதுவாக அனைத்து வகைக் கருவிகளையும் குறிப்பிடும் பாடல்களைக் காண்போம். அனைத்துக் கருவிகளையும் பல இடங்களில் **"பல்லியம்"**, **"தூரியம்"**, போன்ற சொற்களால் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அவற்றையும் ஒரு சிறு ஆய்வு செய்வோம்.

### 1. பலவகை இசைக் கருவிகள், பல்லியம், தூரியம்

சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள வந்தபோது சுந்தரர் அவரிடம் **"நான் உனக்கு அடிமை என்பதனை எவ்வாறு கூறுவீர்"** என்று கேட்டார். இறைவன் அதற்குப் பதில் இருப்பதற்கான ஓலையைக் காட்டினார். அவ்வோலையில் **"சுந்தரர் அடிமை"** என்பது ஐயம்திரிபர விளக்கப்பட்டிருந்தது. இறைவன் சுந்தரருக்கு ஓலையைக் காட்டும்போது, ஓசை ஐந்தும் விசும்பு இடை கேட்டன. இவ்வாறு ஐந்து ஓசையும், ஐந்து வகைக் கருவிகளான, தோல்கருவி, துளைக்கருவி, நரம்புக் கருவி, மிடற்றுகருவி, கஞ்சக் கருவி ஆகியவற்றில் இருந்து வெளிப்பட்டன. இதைச் சேக்கிழார், தமது பாடலில் மிக அழகாகப் பின் வருமாறு கூறுகிறார் :

**எண்ணிய ஓசை ஐந்தும்**
**விசும்பு இடை நிறைய எங்கும்**
**விண்ணவர் பொழி பூ மாரி**
**மேதினி நிறைந்து விம்ம**

**எண்ணவர் மகிழ்ச்சி பொங்க**
**மறைகளும் முழங்கி ஆர்ப்ப**
**அண்ணலை ஓலை காட்டி**
**ஆண்டவர் அருளிச் செய்வார் (பா.215)**

ஐவகைக் கருவிகளையும் வாசிக்க, இதனால் விண்ணுலகமும், மண்ணுலகமும் இசையைக் கேட்டு ஆர்ப்பரிக்க, சிவபெருமானை வழிபட்டதாகச் சேக்கிழார் கூறுகிறார்.

திருநாவுக்கரசு சுவாமிகளின் வரலாற்றைக் கூறுமிடத்துக் அடியார்கள் புடைசூழத் திருவதிகை வீரட்டானத்தை அவர் பாடியதைச் சேக்கிழார் தமது பாடலில் பாடியுள்ளார். அப்பாடலில் முரசு, படகம், துடி, தண்ணுமை, யாழ், முழவம், கிளை, துந்துபி, கண்டை, சங்கு போன்றவை இசைத்தன என்று குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் வரிகள் பின்வருமாறு :

**முரசும் படகம் துடி தண்ணும்மை யாழ்**
**முழவம் கிளைதுந்துபி கண்டையுடன்**
**நிரைசங்கு ஒலி எங்கும் முழங்குதலால்**
**நெடுமாகடல் என் னநிறைந்துளதே (பா.1346)**

பலவகை இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன என்று நமக்குப் பல்வேறு பாடல்களில் குறிப்புகள் கிடைக்கின்றன. பல வகையான இசைக்கருவிகளைச் சேர்த்து ஒரே சமயத்தில் இயக்குவதற்குப் **"பல்லியம்"** என்று பெயர்.

திருநகரச் சிறப்புக் கூறுமிடத்து, பலவகை இசைக்கருவிகள் இசைத்துக் குதிரைகளுடன் ஊர்வலம் வந்ததைப் பின்வரும் பாடலில் சேக்கிழார் எடுத்துரைக்கிறார்:

**பல் இயங்கள் பரந்த ஒலியுடன்**
**செல்வ வீதிச் செழுமணித் தேர் ஒலி**
**மல்லல் யானை ஒலியுடன் மாஒலி**
**எல்லை இன்றி எழுந்துஉள எங்கணும் (பா.88)**

சுந்தரரின் வாழ்க்கை வரலாற்றை எடுத்துரைக்கும் தடுத்தாட் கொண்டபுராணத்தில் சுந்தரரின் திருமணத்தைப் பற்றி எடுத்து இயம்பும்போது, **"பல்லியம்"** இசைக்கப்பட்டன என்று சேக்கிழார் தமது பாடலில் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு:

**மாமறை விதி வழாமல்**
**மணத்துறைக் கடன்கள் ஆற்றித்**
**தூமறை மூதூர்க் கங்குல்**
**மங்கலம் துவன்றி ஆர்ப்பத்**

**தேமருதொடையல் மார்பன்**
**திருமணக் கோலம் காணக்**
**காமுறு மனத்தான் போலக்**
**கதிரவன் உதயம் செய்தான்** (பா.159)

மேற்கண்ட பாடலில் "மங்கலம் துவன்றி ஆர்ப்ப" என்பது பல மங்கல வாத்தியங்கள் சேர்ந்து முழங்கியதைக் குறிக்கின்றது.

திருமண நிகழ்வின்போது பலவகை இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன என்பதனைத் தமது 166வது பாடலிலும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**இயம்பல துவைப்ப எங்கும்**
**ஏத்து ஒலி எடுப்ப மாதர்**
**நயந்து பல்லாண்டு போற்ற**
**நான்மறை ஒலியின் ஓங்க**
**வியந்து பார் விரும்பவந்து**
**விரவினர்க்கு இன்பம் செய்தே**
**உயர்ந்த வாகன யானங்கள்**
**மிசைக் கொண்டார் உழையரானார்** (பா.166)

மணமகன் ஊருக்குள் நுழைந்தபோது பல்வகை இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன. பல்வேறு இசைக்கருவிகளைக் குறிக்கச் சேக்கிழார் "தூரியங்கள்" என்ற சொல்லைத் தமது பாடலில் பயன்படுத்தியுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**நெருங்கு தூரியங்கள் ஏங்க**
**நிரைத்த சாமரைகள் ஓங்க**
**பெருங்குடை மிடைந்து செல்லப்**
**பிணங்கு பூங்கொடிகள் ஆட**
**அருங்கடி மணம் வந்து எய்த**
**அன்றுதொட்டு என்றும் அன்பில்**
**ரும்குல மறையோர் புத்தூர்**
**மணம் வந்த புத்தூர் ஆமால்** (பா.169)

582 வது பாடலில் "தூரியத் துவைப்பு முட்டும்..." என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். இக்குறிப்பு எறிபத்த நாயனாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுமிடத்து வரும் பாடலில் இடம்பெற்றுள்ளது. **'தூரியம்'** என்பதைச் சில அறிஞர்கள் **"கொம்பு"** என்ற இசைக்கருவி என்று கூறுகின்றனர். 'தூரியங்கள்' என்ற சொல் **"பல்லியம்"** என்ற பொருளில் பெரும்பாலான இடங்களில் வருவதாக அ.ச.ஞானசம்பந்தன் குறிப்பிடுகின்றார்.

கண்ணப்ப நாயனார் சரித்திரத்தை எடுத்து உரைக்கையில் அவர் வில்வித்தை கற்றுக் கொள்வதைப் பற்றிச் சேக்கிழார் மிக அழகாக எடுத்துரைத்துள்ளார். அவ்வாறு சேக்கிழார் எடுத்துரைக்கும் பாடலில் **"பல் இயங்கள்"** என்ற சொல்லாக்கம் வருகிறது. அப்பாடல் பின்வருமாறு :

**வெங்கதிர் விசும்பின் உச்சி**
**மேவிய பொழுதில் எங்கும்**
**மங்கல வாழ்த்து மல்க**
**மருங்கு பல் இயங்கள் ஆர்ப்பத்**
**தங்கள் தொல் மரபின் விஞ்சைத்**
**தனுத்தொழில் வலவர் தம்பால்**
**பொங்கு ஒளிக் கரும்போர் ஏற்றைப்**
**பொரு சிலை பிடிப்பித்தார்கள் (பா.689)**

மானக்கஞ்சாற நாயனாரின் சரித்திரத்தைக் கூறும்போது அவருக்கு இறைவன் திருவருளால் குழந்தை பிறந்ததைக் கூறுகிறார். குழந்தை பிறந்த மகிழ்ச்சியான நேரத்தில் இசைக்கருவிகள் இசைத்தன என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**பிறந்தபெரு மகிழ்ச்சியினால்**
**பெருமூதூர்க் களி சிறப்பச்**
**சிறந்த நிறை மங்கல தூரியம்**
**முழங்கத் தேவர் பிரான்**
**அறம்தலை நின்றவர்க்கு எல்லாம்**
**அளவுஇல் வளத்து அருள் பெருக்கிப்**
**புறந்தருவார் போற்றிசைப்பப்**
**பொன்கொடியை வளர்க்கின்றார் (பா.882)**

மூர்த்தி நாயனாரின் வாழ்க்கை வரலாற்றை எடுத்துரைக்கும் சேக்கிழார் **"பல்இயம்"** என்ற சொல்லிற்கு மிக அழகாகத் தமது பாடலில் பொருள் உரைத்துள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**சங்கங்கள் முரன்றன தாரைகள் பேரி யோடும்**
**எங்கெங்கும் இயம்பின பல் இயம் எல்லை இல்ல**
**அங்கங்கு மலிந்தன வாழ்த்து ஒலி அம்பொன்**
**கொம்பின்**
**பங்கன் அருளால் உலகு ஆள்பவர் பாங்கர் எங்கும்**
**(பா.1008)**

இப்பாடலில் சங்கு, தாரை, பேரி போன்ற இசைக்கருவிகள் **"பல் இயங்களாகக்"** குறிப்பிடப்பட்டுள்ளன.

சண்டேசுர நாயனாரின் வரலாற்றைச் சேக்கிழார் அழகாக எடுத்தியம்பியுள்ளார். அவ்வரலாற்றில் சிவபெருமான் சண்டேசுர நாயனாரை அணைத்துக் கொண்ட பாடலில் "பல் இயம்" பற்றிக் கூறியுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**எல்லா உலகும் ஆர்ப்ப எடுப்ப**
**எங்கும் மலர் மாரிகள் பொழியப்**
**பல் ஆயிரவர் கணநாதர்**
**பாடி ஆடிக் களிபயிலச்**
**சொல் ஆர் மறைகள் துதிசெய்யச்**
**சூழ் பல் இயங்கள் எழச்சைவ**
**நல் ஆறு ஓங்க நாயகம் ஆம்**
**நங்கள் பெருமான் தொழுது அணைந்தார்**
**(பா.1267)**

சங்கு, துந்துபி, தாரை, பேரி முதல் பல இசைக் கருவிகள் சேர்ந்த "பல்லியம்" வாசிக்கப்பட்டதாகச் சேக்கிழார் கூறியுள்ளார். அவ்வரிகள் பின்வருமாறு:

**சங்கு துந்துபி தாரை பேரி இம்முதல்**
**பொங்கு பல் இய நாதம் பொலிந்து எழ**
**அங்கணன் அருளால் அவை கொண்டு உடன்**
**பொங்கு காதல் எதிர் கொளப் போதுவார்**
**(பா.2106)**

இப்பாடல் ஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுமிடத்து இடம் பெறுகிறது.

ஞானசம்பந்தர் புள்ளிருக்கு வேளூரை அடைந்தபோது அவரை வரவேற்கப் "பல்லியம்" இசைக்கப்பட்டது என்பதனைத் தமது 2186வது பாடலில் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**சின்னம் தனிக்காளம் தாரை**
**சிரபுரத்து ஆண்டகை வந்தார்**
**என்னும் தகைமை விளங்க**
**ஏற்ற திருப்பெயர் சாற்ற**
**முன்எம் மருங்கும் நிரந்த**
**முரசுடைப் பல்லியம் ஆர்ப்ப**
**மன்னுந் திருத் தொண்டர் ஆனார்**
**வந்து எதிர்கொண்டு வணங்க (பா.2186)**

ஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிராமத்தை அடைந்த போது, வீதிகளில் மங்கலமான இசைக் கருவிகள் இசைத்ததைக் கேட்டார் என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**மங்கல தூரியம் முழங்கும் மணிவீதி**
**கடந்து மதிச் சடையார் கோயில்**
**பொங்கு சுடர்க் கோபுரத்துக்கு அணித்தாகப்**
**புனைமுத்தின் சிவிகை நின்றும்**
**அங்கண் இழிந்தருளம் முறை இழிந்தருளி**
**அணிவாயில் பணிந்து புக்குத்**
**தங்கள் பிரான் கோயில் வலம் கொண்டு திரு**
**முன் வணங்கச் சாரும் காலை (பா.2219)**

ஞானசம்பந்தர் திருக்குடமூக்கினை அடைந்தபோது அவரை வரவேற்க இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன. அதனைச் சேக்கிழார் மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**தேமருவு மலர்ச்சோலைத் திருக்குடமூக்கினில் செல்வ**
**மாமறையோர் பூந்தராய் வள்ளலார் வந்து அருளத்**
**தூமறையின் ஒலிபெருகத் தூரிய மங்கலம் முழங்கக்**
**கோமுறைமை எதிர்கொண்டு தம்பதிஉள் கொடு புக்கார்**
**(பா.2309)**

பல இடங்களில் பல்லியங்கள் இசைக்கப்பட்டுள்ளதாகக் கூறியுள்ளார். பல்லியங்களில் அடங்கியுள்ள இசைக்கருவிகளின் பெயர்களும் பல பாடல்களில் இடம் பெறுகின்றன.

திருவாரூரில் சாலைகளில் இசைக்கருவிகள் முழக்கமிட்டதைச் சேக்கிழார் கீழ்க்கண்ட பாடலில் கூறுகிறார்:

**தழைமலர்த்தடம் சாலைகள் தெற்றிகள் சதுக்கம்**
**தழை முகத்தவர் ஆடு அரங்கு இமையவர் குழாமும்**
**விழை சிறப்பின் வியல் இடம் யாவையும் மிடைந்து**
**மழைமுழக்கு என இயம்பின மங்கல இயங்கள் (பா.2408)**

மழையின் ஓசைபோன்ற மங்கல வாத்தியங்கள் முழங்கியதை ஆசிரியர் இங்குக் குறிப்பிடுகின்றார்.

திருக்கோடிக்கரையில் இறைவனை வணங்கச் சம்பந்தர் சென்றபோது "சங்கம்" போன்ற பல்வேறு இசைக்கருவிகள் முழங்கியதைச் சேக்கிழார் தமது 2523வது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**பொங்கி எழும் திருத்தொண்டர் போற்று எடுப்பார்**
**நால் திசையும்**
**மங்கல தூரியம் தழங்க மறைமுழங்க மழை முழங்கும்**

**சங்க படகம் பேரி தாரை காளம் தாளம்**
**எங்கும் எழுந்து எதிர் இயம்பு இருவிசும்பு**
**கொடிதூர்ப்ப**
**(பா.2523)**

“தழங்க” என்றால் “இசைப்ப” என்று பொருள். இசைக் கருவிகளின் முழக்கத்தினை மிக அருமையான சொல்லாட்சியினால் சேக்கிழார் விளங்குகிறார்.

திருஆலவாய் இறைவனை வணங்குவதற்குக் காழியூர்ப் பிள்ளையார் சென்றபோது கோயிலின் உள்ளே “பல்லியம்” ஒலித்ததாகச் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**பல்லிய நாதம் பொங்கப்**
**படர்திரு நீற்றின் சோதி**
**நல்ஒளி வட்டம்ஆகி**
**நண்ணி மேல் வருவது என்ன**
**வில்வளர் தரளக் கோவை**
**வெண்குடை நிழற்ற வெவ்வேறு**
**எல்லைஇல் முத்தின் காளம்**
**தாரை சங்கு எங்கும் ஒத** **(பா.2646)**

அமணருடன் வாதிடும் போது பாடல் எழுதி நீரில் போடுவதற்காக வைகை ஆற்றின் கரையைச் சம்பந்தர் வந்தடைந்தார். அவர் அவ்வாறு அரசன் மற்றும் அரசியுடன் வைகைக் கரையை அடைந்தபோது “பல்இயம்” இயம்பிதைச் சேக்கிழார் தமது பாடலில் எடுத்து இயம்பி உள்ளார். அப்பாடல் பின்வருமாறு :–

**பல்மணி முரசம் சூழ்ந்த**
**பல்இயம் இயம்பப் பின்னே**
**தென்னனும் தேவியாரும்**
**உடன் செலத் திரண்டு செல்லும்**
**புல்நெறி அமணர் வேறு ஓர்**
**புடைவரப் புகலிவேந்தர்**
**மன்னிய வைகை ஆற்றின்**
**கரை மிசை மருவ வந்தார்** **(பா.2714)**

சம்பந்தர் பெருமானுக்குத் திருமணம் நடந்தபோது, பாலிகை தெளிக்கும் சடங்கின் போது, பலவகை இசைக் கருவிகள் முழங்கியதைச் சேக்கிழார் குறிப்பிடும் பாடல் பின்வருமாறு :

**மன்னு பெருஞ்சுற்றத்தார் எல்லாமும் வந்து ஈண்டி**
**நல் நிலைமைத் திருநாளுக்கு எழுநாள் ஆம் நல் நாளில்**
**பல் மணி மங்கல முரசம் பல்லியங்கள் நிறைந்து ஆர்ப்பப்**
**பொன்மணிப் பாலிகை மீது புனித முளை பூரித்தார்**
**(பா.3075)**

மேலும், திருமண நிகழ்வு நிகழும்போது பல்வேறு கருவிகள் இசைத்தன, என்று அவர் பின்வரும் பாடலில் குறிப்பிட்டுள்ளார் :

**மங்கல தூரிய நாதம் மறுகுதொறும் நின்று இயம்பப்**
**பொங்கிய நான்மறை ஓசை கடல் ஓசை மிகப் பொலியத்**
**தங்கு நறும் குறை அகிலின் தழைத்த செழும் புகையினுடன்**
**செங்கனல் ஆகுதிப் புகையும் தெய்வவிரை மணம் பெருக**
**(பா.3080)**

இதே திருமண நிகழ்வின்போது, மங்கலகரமான சங்கம் முதலிய பல்வேறு நாதங்கள் முழங்கியதைச் சேக்கிழார் தமது **3101** மற்றும் **3102** ஆகிய பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல்கள் பின்வருமாறு :

**ஆனவாகனம் ஏறுவார் யாரும் மேற்கொள்ளக்**
**கானம் ஆகிய தொங்கல் பிச்சம் குடைகவரி**
**மேல் நெருங்கிட விசும்பினும் நிலத்தினும் எழுந்த**
**வான துந்துபி முழக்குடன் மங்கல இயங்கள்**
**(பா.3101)**

**சங்கொடு தாரை சின்னம்**
**தனிப்பெரும் காளம்தாளம்**
**வங்கியம் ஏனை மற்றும்**
**மலர் துளைக் கருவி எல்லாம்**
**பொங்கிய ஒலியின் ஓங்கிப்**
**பூசரர் வேதகீதம்**
**எங்கணும் எழுந்து மல்கத்**
**திருமணம் எழுந்தது அன்றே (பா.3102)**

மற்றொரு பாடலிலும் **"பல இயங்கள்"** இயம்பின என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடலும் சம்பந்தரின் திருமண நிகழ்வினைப் பற்றியே பாடப் பெற்றதாகும். அப்பாடல் பின்வருமாறு :

**எழுந்தன சங்கநாதம்**
**இயம்பின இயங்கள் எங்கும்**
**பொழிந்தன விசும்பில் விண்ணோர்**
**கற்பகப் புதுப்பூமாரி**
**தொழுந்தகை முனிவர் தொண்டர்**
**சுருதியின் வாழ்த்துப் பொங்கி**
**வழிந்தன திசைகள் மீது**
**மலர்ந்தன உலகம் எல்லாம் (பா.3121)**

ஏயர்கோன் கலிக்காம நாயனாரின் வரலாற்றைக் கூறுமிடத்து, அவர் திருவொற்றியூர் இறைவனை வணங்கியபோது, பல்வகை

இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்படல் பின்வருமாறு :

**வரமங்கல நல்இயம் முழங்க**
**வாசமாலை அணி அரங்கில்**
**புர மங்கையர்கள் நடம் ஆடப்**
**பொழியும் வெள்ளப்பூமாரி**
**அரமங்கையரும் அமரர்களும்**
**வீச அன்பருடன் புகுந்தார்**
**பிரமன் தலையில் பலி உகந்த**
**பிரானார் விரும்பும் பெரும் தொண்டர்**
**(பா.3360)**

சிறுத்தொண்ட நாயனார் சரித்திரத்தை எடுத்தியம்பும் போது, அவருக்குக் குழந்தை பிறந்த நிகழ்வினைச் சேக்கிழார் கூறியுள்ளார். அவ்வாறு கூறும்போது பல மங்கல இசைக்கருவிகள் ஒலித்ததைக் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு:

**மங்கல நல்இயம் முழக்கம்**
**முறை முழக்கம் வான் அளப்ப**
**அம்கணர் தம் சீர் அடியார்க்கு**
**அளவு இறந்த நிதி அளித்துத்**
**தங்கள் மரபினில் உரிமைச்**
**சடங்கு தச தினத்தினிலும்**
**பொங்கு பெரு மகிழ்ச்சியுடன்**
**புரிந்து காப்பு அணி புரிந்தார் (பா.3683)**

கழறிற்றறிவார் நாயனாரின் சரித்திரத்தைக் கூறும்போது, சேரமானுடன் சுந்தரர் அமுதுண்ட நிகழ்வைச் சேக்கிழார் விளக்குகிறார். அந்நிகழ்வில் ஆடல் மற்றம் பாடல் இடம் பெற்றதையும், அவற்றிற்கான இசைக் கருவிகள் இசைக்கப்பட்டதையும் அவர் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**பாடல் ஆடல் இன்னியங்கள்**
**பயிறல் முதல்ஆம் பண்ணையினில்**
**நீடும் இனிய விநோதங்கள்**
**நெருங்கு காலம் தொறும் நிகழ**
**மாடுவிரைப் பூந்தரு மணம் செய்**
**ஆராமங்கள் கைகுவித்துக்**
**கூட முனைப்பாடியர் கோவைக்**
**கொண்டு மகிழ்ந்தார் கோதையார் (பா.3906)**

கலிய நாயனாரின் சரித்திரத்தைக் கூறுகையில் திருவொற்றியூர்ப் பதியில் “பல்இயங்கள்” முழங்கியதைச் சேக்கிழார் தமது 4029

மற்றும் 4031வது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல்கள் பின்வருமாறு :

**பன்னு திருப்பதிக இசைப்பாட்டு ஒவா மண்டபங்கள்**
**அன்ன நடை மடவார்கள் ஆட்டு ஒவா அணி அரங்கு**
**பல்முறை தூரியம் முழங்கு விழவு ஒவா பயில் வீதி**
**செந்நெல் அடிசில் பிறங்கல் உணவு ஒவா**
**திருமடங்கள்**
**(பா.4029)**

**எயில் அணையும் முகில் முழக்கும்**
**எறிதிரை வேலையின் முழக்கும்**
**பயில்தரு பல்இய முழக்கும்**
**முறை தெரியாப் பதி அதனுள்**
**வெயில் அணி பல்மணி முதலாம்**
**விழுப் பொருள் ஆவன விளக்கும்**
**தயில வினைத் தொழில் மரபில்**
**சக்கரப் பாடித் தெருவு (பா.4030)**

இவ்வாறு **'பல்இயம்'**, **'இயம்பல'** போன்ற சொற்கள் பல்வேறு இடங்களில் சேக்கிழார் பிரானால் கையாளப்பட்டுள்ளன. தற்காலத்தில் **'வாத்தியக் குழு'** என்ற சொல் கையாளப்படுகிறது. தூயதமிழில் சேக்கிழார் பயன்படுத்தியுள்ள **'பல்இயம்'** போன்ற சொற்களைத் தற்காலத்திலும் கையாண்டால் சிறப்பாக இருக்கும்.

அடுத்ததாகச் சேக்கிழார் **'வீணை'** பற்றிய செய்திகளை எவ்வாறு எடுத்து இயம்பியுள்ளார் என்று பார்ப்போம். வீணையும் யாழும் நரம்புக் கருவிகளாக இருப்பினும் அவை வெவ்வேறு கருவிகளே. எனவே அவற்றினைப் பற்றிய செய்திகளைத் தனித்தனியே பார்ப்போம்.

## 2. வீணை

திருமலைச் சிறப்பைக் கூறுமிடத்து அங்கு நான்கு மறைகளும் ஓதப்படுகின்றன என்றும், **"வீணை"** இசைக்கப்படுகிறது என்றும், வான துந்துபி ஆர்ப்பரிக்கிறது என்றும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**மேன்மை நான் மறை நாதமும் விஞ்சையர்**
**கான வீணையின் ஓசையும் கார்எதிர்**
**தான மாக்கள் முழக்கமும் தாஇல் சீர்**
**வான துந்துபி ஆர்ப்பும் மருங்குஎலாம் (பா.14)**

**'விஞ்சையர் கான வீணை'** என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். **'விஞ்சையர்'** என்றால் **'வித்தியாதரர்கள்'** என்று

பொருள். இனிமையாக வீணை இசைப்பதில் வல்லவர்கள், என்று விஞ்சையர்களை ஆசிரியர் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். திருநகரச் சிறப்பைக் கூறும் 82வது பாடலிலும் சேக்கிழார்:

**பண்தரு விபஞ்சி எங்கும் ...** **(பா.82)**

என்று குறிப்பிடுகின்றார். இங்கு **"விபஞ்சி"** என்பது வீணையைக் குறிக்கும் சொல்லாகும்.

திருநகரச் சிறப்பினை எடுத்துரைக்கும் மற்றொரு பாடலில் சேக்கிழார், அங்கு வீணையின் நாதம், வேதம் ஓதுதலின் இன்னிசையோடு கேட்டுக்கொண்டே இருப்பதைக் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**வேத ஓசையும் வீணையின் ஓசையும்**
**சோதி வானவர் தோத்திர ஓசையும்**
**மாதர் ஆடல் மணிமுழவு ஓசையும்**
**கீத ஓசையுமாய்க் கிளர்வு உற்றவே** **(பா.87)**

அதாவது வேத ஓசை, வீணை ஓசை, முழவோசை, மணி ஓசை இப்படியாக எல்லா ஓசைகளும் இணைந்து கேட்டதெனக் கூறியுள்ளார்.

திருநாளைப் போவார் நாயனாரின் வரலாற்றைக் கூறுமிடத்து, சேக்கிழார் வீணையைப் பற்றிக் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு:

**போர்வைத்தோல் விசிவார் என்று இனையனவும் புகலும் இசை**
**நேர் வைத்த வீணைக்கும் யாழுக்கும் நிலைவகையில்**
**சேர்வுற்ற தந்திரியும் தேவர்பிரான் அர்ச்சனைகட்கு**
**ஆர்வத்தினுடன் கோரோ சனையும் இவை அளித்துள்ளார்**
**(பா.1059)**

**'விசிவார்'** என்றால் இறுகக் கட்டும் வார்கள் என்று பொருள். வீணையிலும் யாழிலும் தந்திகள் உண்டு. **"சேர்வுற்ற தந்திரி"** என்ற சொல் வீணையிலும் யாழிலும் உள்ள நரம்புகளைக் குறிக்கும். வீணையும் யாழும் நரம்புக் கருவிகளாக இருந்தாலும் அவை அமைப்பில் வெவ்வேறாக உள்ளன. இருப்பினும் இரண்டிலிருந்தும் எழும் இசை மிக இனிமையாக உள்ளது என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

**"சேர்வுற்ற தந்திரி"** என்ற சொல் சுருதியோடு சேர்க்கப்பட்ட தந்திகளைக் குறிக்கும். நரம்புக் கருவிகளை இசைப்பதற்கு முன்பு அவற்றில் சுருதி சேர்த்துப் பின்பு வாசிப்பர். தந்தி வாத்தியங்களில்

சுருதி சேர்க்கப்பட்டாலே அவை இனிமையாக ஒலிக்கும். இதனையே சேக்கிழார் மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார் என்று கொள்ளலாம்.

திருஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுமிடத்து அவரது திருமணத்தை விளக்குகிறார் சேக்கிழார். அப்போது 'விபஞ்சி' எனப்படும் **'வீணை'** இசைக்கப்பட்டதைக் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**கோதையர் குழல்சூழ் வண்டின்**
**குழாத்தொலி ஒருபால் கோல**
**வேதியர் வேத வாய்மை மிகும்**
**ஒலி ஒருபால் மிக்க**
**ஏதம் இல் விபஞ்சி வீணை**
**யாழ்ஒலி ஒருபால் ஏத்தும்**
**நாத மங்கலங்கள் கீத**
**நயப்பு ஒலி ஒருபால் ஆக** **(பா.3103)**

சௌந்தரியலஹரியில் அன்னை பராசக்தி வீணை இசைப்பதாகக் கூறுமிடத்தில் **"விபஞ்யா காயந்தி"** என்று ஆதிசங்கரர் கூறுகிறார். எனவே **"விபஞ்சி"** என்பது ஒருவகை வீணை என்றும் நாம் கொள்ளலாம்.

இவ்வாறு சேக்கிழார் தமது பாடல்களில் **"வீணை"** என்ற இசைக்கருவியினைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அடுத்துச் சேக்கிழார் வழங்கியுள்ள **"யாழ்"** பற்றிய செய்திகளைப் பார்ப்போம்.

### 3. யாழ்

பெரியபுராணத்தில் யாழ்பற்றிப் பல இசைக் குறிப்புகள் காணப்படுகின்றன.

தடுத்தாட்கொண்ட புராணத்தில் தில்லையில் உறையும் பரம்பொருளை அடைவதற்கு நல்ல தமிழில் பாடல் பாடப்பட்டதையும், யாழும், முழவும் வாசிக்கப்பட்டதையும் தமது பாடல் வரிகளில் சேக்கிழார் விளக்குகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**பரம்பொருளைப் பணிந்து தாள் பரவிப்போய்ப்**
**பணிந்தவர்க்கு**
**வரம் தருவான் தினை நகரை வணங்கினர்வண் தமிழ்பாடி**
**நரம்புடையாழ் ஒலி முழவின் நாதஒலி வேதஒலி**
**அரம்பையர் தம்கீதஒலி அறாத் தில்லை மருங்கு**
**அணைந்தார்**
**(பா.237)**

**"நரம்புடை யாழ்"** என்று கூறியமையால் யாழிற்கு நரம்புகள் உள என்று நமக்குப் புலனாகிறது.

திருக்குறிப்புத் தொண்ட நாயனாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுமிடத்து, சேக்கிழார் யாழ் பற்றிக் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**குழல்செய் வண்டினம் குறிஞ்சி யாழ் முரல்வன குறிஞ்சி**
**முழவு கார் கொள முல்லைகள் முகைப்பன முல்லை**
**மழலை மென்கிளி மருதுஅமர் சேக்கைய மருதம்**
**நிழல்செய் கைதைசூழ் நெய்தல் அம் கழியன நெய்தல்**
**(பா.1092)**

இப்பாடலில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நால்வகை நிலங்கள் கூறப்பட்டுள்ளன. மேலும் **"குறிஞ்சி யாழ் முரல்வன குறிஞ்சி"**, என்ற குறிப்பும் கிடைக்கிறது. **"குறிஞ்சி யாழ்"** என்பது குறிஞ்சி நிலத்திற்குரிய யாழைக் குறிக்கிறது. குறிஞ்சி யாழிலிருந்து **"குறிஞ்சி"** இசைக்கப்பட்டதாகக் குறிப்பு கிடைக்கிறது. **"குறிஞ்சி"** என்பது தற்காலத்திய **"சங்கராபரண"** இராகத்தைக் குறிக்கும்.

இதே நாயனாரின் வாழ்க்கை வரலாற்றில், கடற்கரை பற்றிய வருணனையில் **"செவ்வழியாழ்"** பற்றிச் சேக்கிழார் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு:

**வாம்பெருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பில்**
**தாம் பரப்பிய கயல்களின் விழிக் கயல் தவிரக்**
**காம்பின் நேர் வரும் தோளியர் விழிக் கயல் விலைசெய்**
**தேம்பொதிந்த சின் மழலைமென் மொழிய செவ்வழி யாழ்**
**(பா.1120)**

இப்பாடலில் **'செவ்வழியாழ்'** மழலை போன்றும் தேன் போன்றும் இனிமையான ஒன்று என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். **"செவ்வழியாழ்"** நெய்தல் நிலத்திற்குரியது. இது இருமத்திமத் தோடியாகவும், இரு துத்தங்கள் உள்ள பாலையாகவும் தற்கால ஆய்வாளர்களால் கருதப்படுகிறது. ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனியாக **"யாழ்"** இருந்ததை நாம் இப்பாடல் மூலம் அறிய முடிகிறது.

யாழ் இசைப்பவரை யாழ்ப்பாணர் என்று அழைப்பது வழக்கம். திருஞானசம்பந்தர் பாடல்கள் பாடும்போது அப்பாடல்களுக்கு ஏற்ற துணைக் கருவியாக யாழை இசைக்கத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் அவருடன் இணைந்தார். அதனைச் சேக்கிழார் தமது பின்வரும் பாடலில் கூறுகிறார் :

**திருநீலகண்டத்துப் பெரும்பாணர் தெள் அமுதின்**
**வருநீர்மை இசைப்பாட்டு மதங்க சூளாமணியார்**
**ஒரு நீர்மையுடன் உடைய பிள்ளையார் கழல்**
**வணங்கத்**
**தருநீர்மை யாழ்கொண்டு சண்பையிலே வந்து**
**அணைந்தார்**
**(பா.2034)**

மிகவும் பொருத்தமான நரம்புகளை உடைய தந்திரி யாழைச் சுருதி சேர்த்து, ஞானசம்பந்தரை வணங்கி, இசைக்கத் தொடங்குகின்றார் திருநீலகண்டர். அதனைத் தமது பாடலில் மிக அழகாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**கோயிலினில் புறமுன்றில் கொடுபுக்குக் கும்பிடுவித்து**
**ஏயும்இசையாழ் உங்கள் இறைவருக்கு இங்கு**
**இயற்றும் என**
**ஆய புகழ்ப் பிள்ளையார் அருள்பெற்ற அதற்கு இறைஞ்சி**
**மேயதொடைத் தந்திரி யாழ் வீக்கி இசை**
**விரிக்கின்றார்**
**(பா.2037)**

வலிவு, மெலிவு, சமன் போன்ற தான நிலைகளில் யாழினைப் பாட்டிற்குப் பொருத்தமாக யாழ்ப்பாணர் இசைத்ததை அடுத்த பாடல் கூறுகிறது.

**தானநிலைக் கோல் வடித்துப் படிமுறைமைத்**
**தகுதியினால்**
**ஆனஇசை ஆராய்வுற்று அங்கணர் தம்பாணியினை**
**மானமுறைப் பாடினியாருடன் பாடி வாசிக்க**
**ஞானபோன கர்மகிழ்ந்தார் நான்மறையோர்**
**அதிசயித்தார்**
**(பா.2038)**

**"கோல்"** என்பது இங்கு யாழ் இசைக்கப் பயன்படுத்தப்படும் கருவியைக் குறிக்கும்.

துணைக் கருவி என்பது பாடலுக்கு ஏற்ப இசைக்கப்பட வேண்டும். அவ்வாறு, யாழின் ஓசையும் குரலிசையும் சேர்ந்து

ஒலித்ததால் இசை நூற்களைக் கற்றுத் தேர்ந்த கந்தருவர்களும், வித்தியாதரர்களும் மகிழ்ந்தனர், என்பதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**யாழில் எழும் ஓசையுடன் இருவர்மிடற்று இசை ஒன்றி**
**வாழி திருத்தோணியுளார் மருங்கு அணையும் மாட்சியினைத்**
**தாழும் இகு சிறைப்பறவை படிந்ததனி விசும்பிடை நின்று**
**ஏழிசைநூல் கந்தருவர் விஞ்சையரும் எடுத்து இசைத்தார்**
**(பா.2039)**

**'மிடற்று இசை'** என்பது குரலிசையைக் குறிக்கும் நற்றமிழ்ச் சொல்லாகும்.

பலவகை சீர்களை அமைத்துத் திருத்தோணிபுரத்து இறைவனைப் பிள்ளையார் பாடினார். அவற்றினை யாழ்ப்பாணர் யாழில் நன்கு இசைத்தார். இதனைச் சேக்கிழார் பின்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்.

**எண்அரும்சீர்த் திருத்தோணி எம்பெருமான் கழல் பரவிப்**
**பண் அமையாழ் இசைகூடப் பெரும்பாணர் பாடியபின்**
**கண்ணுதலார் அருளினால் காழியர்கோன் கொடுபோந்து**
**நண்ணிஉறைவிடம் சமைத்து நல்விருந்து சிறந்து அளிப்ப**
**(பா.2040)**

காழியாரின் அருள் பெற்றதால் யாழ்ப்பாணர் திருப்பதிகங்களை யாழில் அழகாக இசைத்ததைச் சேக்கிழார் தமது பாடலில் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார்:

**காழியார் தவப்பயனாம் கவுணியர்தம் தோன்றவார்**
**ஆழிவிடம் உண்டவர்தம் அடிபோற்றும் பதிக இசை**
**யாழின் முறைமையின் இட்டே எவ்வுயிரும் மகிழ்வித்தார்**
**ஏழ்இசையும் பணிகொண்ட நீலகண்ட யாழ்ப்பாணர்**
**(பா.2042)**

யாழ்ப்பாணர், **"நீங்கள் இனிப் பாடப்போகும் பாடல்களையும் உங்கள் அருளால் யாழில் இசைக்க, நீங்கள் அருள வேண்டும்"** என்று ஞானசம்பந்தரை வேண்டுகிறார். அதனைச் சேக்கிழார் தமது பின்வரும் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

**சிறியமறைக் களிறு அளித்த திருப்பதிக இசையாழின்**
**நெறியில் இடும் பெரும்பாணர் பின்னும் நீர் அருள் செய்யும்**
**அறிவு அரிய திருப்பதிக இசையாழில் இட்டு அடியேன்**
**பிறிவு இன்றிச் சேவிக்கப் பெற வேண்டும் எனத் தொழுதார்**
**(பா.2043)**

இதனைக்கேட்டு மகிழ்ந்த பிள்ளையார் மேலும் பாடல்கள் புனைய, அவற்றினை யாழ்ப்பாணர் இசைத்ததைப் பின்வரும் பாடலில் காணலாம்:

**மற்று அதற்குப் பிள்ளையார் மனம் மகிழ்வுற்று இசைந்தருளப்**
**பெற்றவர்தாம் தம்பிரான் அருள் இதுவே எனப் பேணி**
**சொல்தமிழ் மாலையின் இசைகள் சுருதியாழ் முறை தொடுத்தே**
**அற்றைநாள் போல் என்றும் அகலா நண்புடன் அமர்ந்தார்**
**(பா.2044)**

இப்பாடலில் "முறை தொடுத்தே" என்ற சொல்லாக்கம் வருகிறது. இதற்கு "முறையாக இசைக்கப்பட்ட சுரங்களும் அவற்றினுள்ளே இருந்து பிறந்த பண்களும்" என்று பொருள் கொள்ளலாம்.

இவ்வாறு ஞானசம்பந்தர் பல பதிகளைப் பாடி, தில்லையம்பலத்திலிருக்கும் இறைவனை வணங்கிப் பாடினார். அப்போது, யாழ்ப்பாணரும் பல நாகளாகக் கூடவே இருந்து இசைத்த பயிற்சியினால் யாழை மிக நன்றாக இசைத்தார் என்று சேக்கிழார் பாடியுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**பாடும் பதிக இன்னிசை யாழ்ப்பாணரும் பயிற்றி**
**நாடும் சிறப்பு எய்த நாளும் நடம் போற்றுவார்**
**நீடும் திருத்தில்லை அந்தணர்கள் நீள் மன்றுள்**
**ஆடும் கழற்கு அணுக்கராம் பேறதிசயிப்பார்**
**(பா.2071)**

திருஎருக்கத்தம்புலியூர் இறைவனைப் பாடுவதற்கு ஞானசம்பந்தர் போனபோது யாழுடன் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவருடன் சென்றார். அதனைச் சேக்கிழார் தமது பின்வரும் பாடலில் கூறியுள்ளார்:

**பொங்கு தெண்திரைப் புனிதநீர்**
**நிவாக்கரைக் குடதிசை மிசைப்போந்து**
**தங்கு தந்தையாருடன் பரி**
**சனங்களும் தவமுனிவரும் செல்லச்**
**செய்கையாழ்த் திருநீல**
**கண்டப் பெரும்பாணனாருடன் சேர**
**மங்கையார் புகழ் மதங்கசூ**
**ளாமணியார் உடன் வரவந்தார் (பா.2080)**

தருமபுரத்தில் ஞானசம்பந்தரின் பாடலைத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் இசைத்தார். அதனைச் சேக்கிழார்,

**பெருமை உடைப் பெரும்பாணர் அவர்க்கு உரைப்பார்**
**பிள்ளையார் அருளிச் செய்த**
**அருமை உடைப்பதிகம் தாம் யாழினால்**
**பயிற்றும்பேறு அருளிச் செய்தார் (பா.2347)**

என்று குறிப்பிடுகின்றார். யாழ்ப்பாணரின் யாழிசையைக் கேட்டவர்கள் அவரைப் புகழ ஆரம்பித்தார்கள். அதனைக் கேட்ட யாழ்ப்பாணர் நடுநடுங்கி, ஞானசம்பந்தரை வணங்கினார். யாழில் பொருந்தாத இசையைக் காட்டுமாறு வேண்டினார். அதனைச் சேக்கிழார்,

**அலகுஇல் திருப்பதிக இசை அளவுபடா**
**வகை இவர்கள் அன்றியேயும்**
**உலகில் உளோரும் தெரிந்து அங்கு உண்மையினை**
**அறிந்து உய்ய உணர்த்தும் பண்பால்**
**பலர் புகழும் திருப்பதிகம் பாடி அருளப்**
**பெற்றால் பண்புநீடி**
**இலகும் இசை யாழின் கண் அடங்காமை**
**யான்காட்டப் பெறுவன் என்றார் (பா.2349)**

என்று குறிப்பிடுகின்றார்.

ஞானசம்பந்தர் **"மாதர்மடப்பிடியும்"** என்ற பாடலைப் பாடினார். அப்பதிகத்து இசை யாழில் அடங்கவில்ல. ஏனெனில் அப்பண்ணின் சில நுண்ணசைவுகளை யாழ்ப்பாணரால் யாழில் இசைக்க இயலவில்லை. இதனைச் சேக்கிழார் பின்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார் :

**வண்புகலி வேதியனார் "மாதர் மடப்**
**பிடி" எடுத்து வனப்பின் பாடிப்**
**பண்பயிலும் திருக்கடைக்காப்புச் சாத்த**
**அணைந்து பெரும் பாணனார் தாம்**

**நண்புடை யாழ்க் கருவி யினில் முன்புபோ**
**கைக்கொண்டு நடத்தப் புக்கார்க்கு**
**எண்பெருகும் அப்பதிகத்து இசை நரம்பில்**
**இடஅடங்கிற்று இல்லை அன்றே (பா.2351)**

சம்பந்தர் வனப்பு வண்ணத்தில் பாடியதை இப்பாடல் கூறுகிறது. எனவே நாம் வனப்பு வண்ணம் யாழில் அடங்காது எனக் கொள்ளலாம்.

யாழில் பாடல் அடங்காதது தமது குற்றம் எனக் கருதிய யாழ்ப்பாணர் **"அதனைத் தொடமாட்டேன்"**, என்று கூறுகிறார். அதனைச் சேக்கிழார்

**... இப்பெரியோர் அருள்செய்த திருப்பதிகத்து**
**இசை யாழில் ஏற்பன் என்னச்**
**செப்பியது இக்கருவியை நான் தொடுதலின்**
**நன்றோ என்று தெளிந்து செய்வார் (பா.2352)**

என்று குறிப்பிடுகின்றார். அது **"யாழின் குற்றம்"** என்று குறிப்பிடுகின்றார் ஞானசம்பந்தர். அதனைச் சேக்கிழார் குறிப்பிடும் பாடல் பின்வருமாறு :

**வீக்கு நரம்புடைய யாழினால் விளைந்தது**
**இது என்று அங்கு அதனைப் போக்க**
**ஒக்குதலும் தடுத்தருளி ஐயரே**
**உற்ற இசை அளவனால் நா**
**ஆக்கிய இக்கருவியினைத் தாரும் ... (பா.2353)**

புகலி மன்னர் அது **"யாழின் குற்றம்"** என்று கூறி, தாம் பாடிய பாடல் **'யாழ்முரியில்'** அமைந்தது என்றும் குறிப்பிடுகிறார். அதனைச் சேக்கிழார்

**ஐயர் நீர் யாழ் இதனை முரிக்கும்... (பா.2354)**

என்று குறிப்பிட்டுள்ளார்.

பின்பு பிள்ளையார் யாழினைத் தொட்டுத் தருகிறார். அதனால் அதற்குச் சிறப்பு உண்டாயிற்றெனச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**சிந்தையால் அளவுபடா இசைப்பெருமை**
**செயல் அளவில் எய்துமோ நீர்**
**இந்த யாழினைக் கொண்டே இறைவர் திருப்**
**பதிக இசை இதனில் எய்த**

**வந்தவாறே பாடி வாசிப்பீர்**
**எனக் கொடுப்பப் புகலிமன்னர்**
**தந்த யாழினைத் தொழுது கைக்கொண்டு**
**பெரும்பாணர் தலைமேல் கொண்டார்**
**(பா.2355)**

ஞானசம்பந்தர் திருநள்ளாற்றை அடைந்து, "**போகமார்த்த பூண் முலையாள்**", என்று துவங்கிப் பதிகம் பாடினார். அதற்கேற்றவாறு யாழ்ப்பாணர் யாழினை இசைத்தார். அதனைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**யாழ்நரம்பில் ஆரஇயல் இசைகூடப்**
**பாடியே எண்இல் கற்பச்**
**சேண் அளவு படஓங்கும் திருக்கடைக்காப்புச்**
**சாத்திச் செங்கண்நாகப்**
**பூண் அகலத் தவர் பாதம் போற்றிசைத்துப்**
**புறத்து அணைந்து புவனம் ஏத்தும்**
**பாணனார் யாழில் இடப் பாலறா**
**வாயர் அருள்பணித்த போது (பா.2360)**

சம்பந்தர் தாளம் போட்டுக் கொண்டே பாட, யாழ்ப்பாணர் நரம்புகளை முறுக்கிச் சுருதி சேர்த்துக் கொண்டு பாடியதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**பிள்ளையார் திருத்தாளம் கொடுபாடப்**
**பின்பு பெரும் பாணனார் தாம்**
**தெள்அமுத இன்இசையின் தேம்பொழி**
**தந்திரி யாழைச் சிறக்க வீக்கிக்**
**கொள்ள இடும் பொழுதின்கண் குவலயத்தோர்**
**களிகூரக் குலவு சண்பை**
**வள்ளலார் திருவுள்ளம் மகிழ்ந்துதிருத்**
**தொண்டருடன் மருவுங்காலை (பா.2361)**

திருச்சாத்தமங்கையில் திருநீலநக்கரின் இல்லத்தில் சம்பந்தரும் யாழ்ப்பாணரும் தங்கியதை

**நீடு திரு நீலநக்கர் நெடுமனையில்**
**விருந்து அமுது செய்து நீர்மைப்**
**பாடும் யாழ்ப் பெரும் பாணரும் தங்க**
**அங்கு இரவு பள்ளி மேவி ... (பா.2366)**

என்று சேக்கிழார் எடுத்துரைக்கின்றார்.

ஏயர்கோன் கலிக்காம நாயனாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுமிடத்து, சேக்கிழார், சுந்தரருக்கும் சங்கிலியாருக்கும் நிகழ்ந்த மணநிகழ்வை எடுத்துரைக்கிறார். சங்கிலியார் குரல் இனிமையைக் கூறுகையில் "யாழினை ஒத்த இனிமையான குரல்" என்று கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

யாழின்மொழி எழில்முறுவல் இருகுழை மேல்கடை
பிறழும்
மாழைவிழி வன முலையார் மணி அல்குல்துறை படிந்து
வீழும் அவர்க்கு இடை தோன்றி மிகும் புலவி
புணர்ச்சிக் கண்
ஊழி ஆம்ஒரு கணம்தான் அவ்வூழி ஒரு கணம் ஆம்"
(பா.3427)

திருநீலகண்ட யாழ்ப்பாணரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும்போது, அவரை உலகம் யாழின் இசைக்காகப் புகழ்ந்து கொண்டே இருக்கும் என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

கருநீல மிடற்றார் செய்ய
கழல் அடி நீழல் சேர
வரும் நீர்மை உடைய செங்கண்
சோழர் தம் மலர்த்தாள் வாழ்த்தித்
திரு நீர்மை இசைகொள் யாழின்
தலைவராய் உலகம் ஏத்தும்
திருநீல கண்டப் பாணர்
திறம் இனிச் செப்பல் உற்றேன் (பா.4219)

'திருநீர்மை இசை கொள்' என்று கூறப்பட்டுள்ளதால் சிறப்புற வாசிக்கப்பட்ட இசை என்று நாம் கொள்ளலாம்.

திருஆலவாயில் அமர்ந்தான் கோவிலில் ஏழுபாலைகளையும் யாழ்ப்பாணர் இசைத்ததைச் சேக்கிழார் பாடியுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

ஆலவாய் அமர்ந்தார் கோயில்
வாயிலை அடைந்து நின்று
பாலை ஈரேழு கோத்த
பண்ணினில் கருவி வீக்கித்
காலம் ஆதரித்த பண்ணின்
கைபல முறையும் ஆராய்ந்து
ஏலவார் குழலாள் பாகர்
பாணிகள் யாழில் இட்டார் (பா.4221)

பாலைக்கு ஏற்ற நரம்புகளை இறுக்கி முதல், இடை, கடை போன்ற கால மாறுபாடுகளுக்கு ஏற்றவாறு கைகளை ஆராய்ந்து யாழ் வாசிக்கப்பட்டதைச் சேக்கிழார் கூறுகின்றார்.

சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதையில் **"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியின், ஓரேழ் பாலை நிறுத்தல் வேண்டி" (பா.70)** என்று குறிப்பிடப்பட்டுள்ளது. **"கைபல முறையும் ஆராய்ந்து"** என்று குறிப்பிடப்பட்டுள்ளதால், பலவகை யாழ்க்கைகள் யாழை இசைப்பதில் பயன்படுத்தப்பட்டன என்று நாம் கொள்ளலாம். யாழ்ப்பாணர் வார்த்தல், வடித்தல் போன்ற நெளிவு சுளிவுகளைக் கையாண்டார் என்றும் கொள்ளலாம்.

மதுரையில் இறைவன், தமது தொண்டர்கள் அனைவருக்கும் யாழ்ப்பாணருக்குக் கோவிலுக்குள் வரவேற்புச் செய்யுமாறு பணித்தார். சேக்கிழார் அதனை,

**மற்றவர் கருவிப்பாடல்**
**மதுரை நீடு ஆலவாயில்**
**கொற்றவன் திருவுள்ளத்துக்**
**கொண்டுதன் தொண்டர்க்கு எல்லாம் ...**
**(பா.4222)**

என்று எடுத்துரைக்கிறார். 'கருவிப்பாடல்' என்பது யாழிசையைக் குறிக்கும். திருஆலவாயில் யாழ்ப்பாணர் இசைத்ததைச் சேக்கிழார்,

**அந்தரத்து எழுந்த ஓசை**
**அன்பினில் பாணர் பாடும்**
**சந்தயாழ் தரையில் சீதம்**
**தாக்கில் வீக்கு அழியும் என்று... (பா.4225)**

என்று குறிப்பிடுகின்றார்.

இறைவனைச் சேக்கிழார் **"யாழின் மொழியான்" (பா.4229)** என்று குறிப்பிடுகின்றார். மேலும், யாழில் நல்ல இசை இசைக்கும் திருநீலகண்ட யாழ்ப்பாணர், இறைவனை அடைந்ததை மிக அழகாகக் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**ஞானம் உண்டார் கேட்டருளி**
**நல்ல இசையாழ்ப் பெரும்பாணர்க்கு**
**ஆன படியால் சிறப்பு அருளி**
**அமரும் நாளில் அவர் பாடும்**
**மேன்மைப் பதிகத்து இசை யாழில்**
**இடப்பெற்று உடனே மேவியபின்**
**பானல் களத்தார் பெருமணத்தில்**
**உடனே பரமர் தாள் அடைந்தார் (பா.4230)**

இவ்வாறு தமது பல்வேறு பாடல்களில் சேக்கிழார் நமக்கு "யாழ்" இசைக் குறிப்புகளை வழங்கியுள்ளார். அடுத்து, சேக்கிழார் முரசு, முழவம், பறை போன்ற கருவிகளைப் பற்றி வழங்கியுள்ள செய்திகளைக் காண்போம்.

**4. முரசு, முழவு, பறை முதலியன**

திருநகரச் சிறப்புகளைக் கூறுமிடத்து நகரில் **"முழவு"** ஓசை கேட்டதைச் சேக்கிழார் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**... மாதர் ஆடல் மணி முழவு ஓசையும்**
**கீதஓசையுமாய்க் கிளர்வு உற்றவே** **(பா.87)**

அரச குமரன் வீதி உலா வருவதைச் சித்திரிக்கும் வர்ணனையாகப் பின்வரும் பாடல் அமைந்துள்ளது. அதில் முரசு, முழவு, சங்கு போன்ற இசைக்கருவிகள் இடம் பெற்றுள்ளன.

**பரசு வந்தியர் முன் சூதர்**
**மாகதர் ஒருபால் பாங்கர்**
**விரை நறுங் குழலார் சிந்தும்**
**வெள்வளை ஒருபால் மிக்க**
**முரசொடு சங்கம் ஆர்ப்ப**
**முழங்கு ஒலி ஒருபால் வென்றி**
**அரசு இளங்குமரன் போதும்**
**அணிமணி மாட வீதி** **(பா.106)**

**"பரசுவந்தியர்"** என்போர் பாடல்கள் பாடி இறைவனைத் துதிக்கும் பாணர்கள். **"மாகதர்"** என்பவர்கள் அவர்களுக்குத் துணைப் பாடகர்கள். இவர்கள் பாடிய பாடல்களுக்குக் குழல், முரசு, முழவு, சங்கு போன்ற இசைக் கருவிகள் வாசிக்கப்பட்டன என்றும், அவ்வாறு இசைக்கருவிகள் இசைக்கப்பட்டபோது அரசகுமரன் வீதி உலா வந்தான் என்றும், சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

மேலும் பறைமுழக்குக் கேட்டதை

**பழிப்பறை முழக்கோ ஆர்க்கும் ...** **(பா.113)**

என்றும் குறிப்பிடுகின்றார்.

தடுத்தாட்கொண்ட புராணத்தில், சுந்தரரின் திருமண நிகழ்வின் போது, **"முரசு"** இயம்பியதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**பணை முரசு இயம்ப வாழ்த்திப்**
**பைம்பொன்நாண் காப்புச் சேர்த்தார்** **(பா.158)**

சுந்தரர் தில்லையம்பதியை அடைந்தபோது "முழவு" இசைக்கப் பட்டதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**... நரம்புடையாழ் ஒலிமுழவின்**
**நாதஒலி வேதஒலி**
**அரம்பையர் தம் கீதஒலி அறாத்**
**தில்லை மருங்கு அணைந்தார்** **(பா.237)**

கண்ணப்ப நாயனாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறும்போது வில் விழாவினைப் பற்றிச் சேக்கிழார் கூறுகிறார். அவ்விழாவில் ஒலித்த இசைக் கருவிகளைத் தமது பாடலில் அவர் கூறியுள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**தொண்டக முரசும் கொம்பும்**
**துடிகளும் துளைகொள் வேயும்**
**எண்திசை நிறைந்து விம்ம**
**எழுந்த பேர் ஒலியினோடும்**
**திண்திறல் மறவர் ஆர்ப்புச்**
**சேண்விசும்பு இடித்துச் செல்லக்**
**கொண்ட சீர் விழவு பொங்கக்**
**குறிச்சியை வலம் கொண்டார்கள்** **(பா.687)**

**"தொண்டகமுரசு"** என்பது குறிஞ்சி நிலத்தில் இசைக்கப்படும் ஒருவகை முரசாகும். இதனைக் **"குறிஞ்சிப் பறை"** என்றும் குறிப்பிடுவர். **"கொம்பு"** என்பது ஊதி இசைக்கப்படும் ஓர் இசைக்கருவியாகும். **"துடி"** என்பது ஒருவகைத் தாளக் கருவியாகும். **'துளை கொள்வேய்'** என்பது புல்லாங்குழலைக் குறிக்கும். இக்கருவிகள், வானைமுட்டும் முழக்கம் கேட்க, இசைக்கப்பட்டதைச் சேக்கிழார் மிக அழகாக எடுத்துரைத்துள்ளார்.

**'பறை'** போன்ற இசைக் கருவிகள் ஒலிப்பதை **'ஆகுளிக்குலம்'** இசைப்பதாகச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிடுகின்றார். சிலர் **'ஆகுளி'** என்பது தனித்த ஓர் இசைக்கருவியைக் குறிக்கும் என்றும் கூறுவர். சேக்கிழார் **"ஆகுளி"** பற்றிக் கூறும் பாடல் பின்வருமாறு :

**கோடு முன்பு ஒலிக்கவும் குறுங்கண் ஆகுளிக்குலம்**
**மாடு சென்று இசைப்பவும் மருங்கு பம்பை கொட்டவும்**
**சேடு கொண்டு கைவிளிச் சிறந்த ஓசை செல்லவும்**
**காடு கொண்டு எழுந்தவேடு கைவளைந்து சென்றதே**
**(பா.721)**

**'கோடு'** என்பது கொம்பு என்ற இசைக் கருவியாகும். **'ஆகுளிக்குலம்'** என்பது முன்பே சொன்னதுபோல் பல பறைகள் ஒன்றாகச் சேர்ந்ததாகும். 'பம்பை' என்பது சிவபெருமானிடம் இருப்பதாகக் கூறப்படும் ஓர் இசைக் கருவியாகும்.

மேலும் **'துடி'** எனப்படும் **"உடுக்கை"** போன்று கால்களை உடையவராகச் சேக்கிழார் கண்ணப்ப நாயனாரைக் கூறுகிறார். அவ்வரிகள் பின்வருமாறு :

**துடிஅடியன மடிசெவியன...** **(பா.735)**

மானக்கஞ்சாற நாயனாரின் மகளின் திருமணத்தின் போது முரசு இயம்பியதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**கஞ்சாறர் மகள் கொடுப்பக்**
**கைப் பிடிக்க வருகின்ற**
**எஞ்சாத புகழ்ப் பெருமை**
**ஏயர் குலப் பெருமானும்**
**தம்சால்பு நிறை சுற்றம்**
**தலைநிறைய முரசு இயம்ப**
**மஞ்சு ஆலும் மலர்ச் சோலைக்**
**கஞ்சாற்றின் மருங்கு அணைய** **(பா.890)**

திருக்குறிப்புத் தொண்ட நாயனாரின் வாழ்க்கையை விவரிக்கும்போது குறிஞ்சி, முல்லை போன்ற நிலங்களைப் பற்றிச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அவ்வாறு கூறும்போது **"முழவு"** ஒலித்ததை அவர் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**... முழவு கார்கொள முல்லைகள் முகைப்பன**
**முல்லை... (பா.1092)**

திருநாவுக்கரசு சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றை எடுத்தியம்பும் போது முரசும், படகம், துடி, தண்ணுமை, யாழ், முழவம், கிளை துந்துபி, கண்டை, சங்கு முதலியவை திருவதிகை வீரட்டானத்தில் ஒலித்ததாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**பரசும் கருணைப் பெரியோன் அருளப்**
**பறிபுன் தலையோர் நெறிபாழ் படவந்து**
**அரசுஇங்கு அருள்பெற்று உலகு உய்ந்ததுஎனா**
**அடியார் புடைசூழ் அதிகைப் பதிதான்**
**முரசும் படகம் துடி தண்ணுமையாழ்**
**முழவம் கிளை துந்துபி கண்டையுடன்**

**நிரைசங்கு ஒலிஎங்கும் முழங்குதலால்**
**நெடுமா கடல்என்ன நிறைந்துளதே (பா.1346)**

மேலும் திரு அதிகை வீரட்டானத்தில் அரசனும் அமைச்சர்களும் சேனைகளுடனும் முரசுடனும் சென்றதைச் சேக்கிழார்,

**அரசனது பணிதலை நின்று அமைச்சர்களும்**
**அந்நிலையே**
**முரசு அதிரும் தானையொடு முன் சென்று முகில்**
**சூழ்ந்து ...**
**(பா.1361)**

என்று குறிப்பிடுகின்றார்.

காரைக்கால் அம்மையார் திருமணத்தின் போது பருத்த முரசு ஆர்ப்பரித்ததைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**மணம் இசைந்த நாள் ஒலை செலவிட்டு மங்கல நாள்**
**அணையவது வைத்தொழில்கள் ஆனஎலாம்**
**அமைவித்தே**
**இணர் அலங்கல் மைந்தனையும் மணஅணியின்**
**எழில் விளக்கிப்**
**பணை முரசம் எழுந்து ஆர்ப்பக் காரைக்கால் பதி**
**புகுந்தார்**
**(பா.1731)**

ஞானசம்பந்தரின் பிறப்பின்போது **“தாரை”** முதலியவை முழங்கியதை

**அங்கண் விழவில் பெருகு சண்பை அகல் மூதூர்ச்**
**சங்க படகம் கருவி தாரை முதல் ஆன**
**எங்கணும் இயற்றுபவர் இன்றியும் இயம்பும்**
**மங்கல முழக்குஒலி மலிந்த மறுகு எல்லாம் (பா.1936)**

என்று சேக்கிழார் பாடியுள்ளார்.

மேலும் சேக்கிழார், பல பதிகளையும் வணங்கிச் சம்பந்தர் பிரமபுரத்தை நோக்கிச் சென்றபோது, பல வகை முரசங்கள் முழங்கியதைத் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**மண்உலகு செய்த தவப்பயனாய் உள்ள**
**வள்ளலார் அப்பதிகள் வணங்கி ஏகி**
**எண்இல் முரசு இரங்கி எழப் பணிலம் ஆர்ப்ப**
**இலங்கிய காளம் சின்னம் எங்கும் ஊதக்**

**கண்வளர்மென்கரும்பும் இடைகதிர்ச் செஞ்சாலி**
**கதவிகமுகு உடன்ஓங்கும் கழனி நாட்டுத்**
**தென்நிலவு சூடியதம் பெருமான் வைகும்**
**திருப்பிரமபுரம் சாரச் செல்லும் போது**
**(பா.2159)**

**"காளம்"** என்பதும் **"சின்னம்"** என்பதும் தமிழ்நாட்டுக் கோவில்களில் பயன்படுத்தப்படும் இசைக்கருவிகளாகும். **"எண் இல் முரசு"** என்று குறிப்பிட்டமையால் எண்ணில்லாத முரசங்கள் இயம்பின என்று இங்கு நாம் பொருள் கொள்ளலாம்.

ஞானசம்பந்தர் ஏடு இட வைகைக்கு வந்தபோது பல்மணி முரசம் இயம்பியதை,

**பல்மணி முரசம் சூழ்ந்த**
**பல்இயம் இயம்பப்பின்னே... (பா.2714)**

என்று சேக்கிழார் பாடியுள்ளார்.

அங்கம்பூம் பாவையின் கதையை எடுத்து இயம்பும்போது, சிவநேசன் செட்டியார் **"பறை"** அறிவித்ததைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**முரசு இயம்பிய மூன்று நாள் அகவையின் முற்ற**
**அரசர் பாங்குளோர் உட்பட அவனிமேல் உள்ள**
**கரைஇல் கல்வியோர் யாவரும் அணைந்து தம் காட்சிப்**
**புரைஇல் செய்கையில் தீர்ந்திடாது ஒழிந்திடப் போனார்**
**(பா.2967)**

ஞானசம்பந்தரின் திருமணத்தின் போது முரசியம்பியதை

**பல்மணி மங்கல முரசம் . . . ஆர்ப்ப (பா.3075)**

என்று சேக்கிழார் கூறுகிறார்.

ஏயர்கோன் கலிக்காம நாயனார் பிறந்த திருப்பெருமங்கலம் என்னும் ஊர் பற்றிச் சித்திரிக்கும் போது, **"முழவு"** ஒலிக்குப் பெண்கள் நடனமாடியதைச் சேக்கிழார் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**விழவு அறாதன விளங்கு ஒளி மணி நெடுவீதி**
**முழவு அறாதன மொய் குழலியர் நட அரங்கம்**
**மழவு அறாதன மங்கலம் பொலி மணி முன்றில்**
**உழவு அறாத நல் வளத்தன ஓங்கு இருங்குடிகள்**
**(பா.3162)**

பூசலாரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுமிடத்து, முரசு ஒலிக்கச் சேனைகள் ஊர் திரும்பியதைச் சேக்கிழார்,

**... முரசு எறி தானையோடு**
**மீண்டு தன் மூதூர்ப் புக்கான் (பா.4191)**

என்று குறிப்பிடுகின்றார். இதனால், சேனைகள் எப்போதெல்லாம் சென்றனவோ அப்போதெல்லாம் முரசும் இயம்பின, என்று நமக்குத் தெரிய வருகின்றது.

இவ்வாறு "முரசம்" "முழவு", "பறை" போன்றவற்றைப் பற்றிப் பல்வேறு குறிப்புகளைச் சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் அழகாக வழங்கியுள்ளார். அடுத்து, சங்கு பற்றிய குறிப்புகளைப் பார்ப்போம்.

**5. சங்கு**

சங்கினைப் பற்றிக் கூறும் போது சங்கிற்குப் பல வகையான பெயர்களைச் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். திருநாட்டின் சிறப்பைக் கூறும் 73வது பாடலில்

**சுரிவளை சொரிந்த முத்தின்**
**சுடர் பெரும் பொருப்ப உய்ப்பார் ... (பா.73)**

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். '**சுரிவளை**' என்பது சங்கினைக் குறிக்கின்றது.

சுந்தரரின் திருமணத்தின் போது சங்கு ஊதப்பட்டதாகக் குறிப்பு காணப்படுகிறது. இச்சங்கு "**மணச்சங்கு**" என அழைக்கப்படுகின்றது. திருமண வேளையில், மணச்சங்கு பெரிய மேகக்கூட்டத்தைப் போல முழங்கியதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிடுகிறார். அப்பாடல் பின்வருமாறு:

**வருமணக் கோலத்து எங்கள்**
**வள்ளலார் தெள்ளும் வாசத்**
**திருமணப் பந்தர் முன்பு**
**சென்று வெண்சங்கம் எங்கும்**
**பெருமழைக் குலத்தின் ஆர்ப்பப்**
**பரி மிசை இழிந்து பேணும்**
**ஒரு மணத் திறத்தின் ஆங்கு**
**நிகழ்ந்தது மொழிவேன் உய்ந்தேன் (பா.173)**

சங்கநாதம் பெரும்பான்மையான நேரங்களில் பிற இசைக் கருவிகளுடன்தான் ஒலித்தது. இதனைப் பல இடங்களில் சேக்கிழார்

கூறியுள்ளார். எரிபத்த நாயனார் கதையைக் கூறுங்கால் 581ஆம் பாடலில் போர் இசைக் கருவிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதில் பல கருவிகள் சங்கோடு முழங்கியதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**சங்கொடு தாரை காளம்**
**தழங்கு ஒலி முழங்கு பேரி**
**வெங்குதல் பம்பை கண்டை**
**வியன் துடி திமிலை தட்டி**
**பொங்கு ஒலிச் சின்னம் எல்லாம்**
**பொரு படைமிடைந்த பொற்பின்**
**மங்குலான் கிளர்ச்சி நாண்**
**மருங்கு எழுந்து இயம்பி மல்க (பா.581)**

போர்க் காலத்திற்குரிய இசைக் கருவிகள் பற்றிய விரிவான குறிப்பு இப்பாடலில் உள்ளது. போருக்குச் செல்வதற்கு முன் இவ்வகைக் கருவிகள் வாசிக்கப்பட்டன. இதில் குறிப்பிட்டுள்ள கருவிகளாவன: சங்கு, தாரை, காளம், பேரி, பம்பை, கண்டை, துடி, திமிலை, சின்னம் போன்றவையாகும்.

முருக நாயனாரின் வாழ்க்கையைக் கூறும்போது சங்கங்கள் முழங்கியதை,

**சங்கங்கள் முரன்றன... (பா.1008)**

என்று சேக்கிழார் கூறுகிறார்.

போர்க்காலங்களில் மட்டுமின்றி விழாக்காலங்களிலும் தெருக்கள் தோறும் இசைக்கருவிகள் இசைக்கப்பட்டதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். ஞானசம்பந்தர் பிறந்து வளர்ந்ததைக் காழியூரில் விழாவாகக் கொண்டாடினர். அப்போது பல்வேறு இசைக்கருவிகள் சங்கோடு முழங்கியதைப் பின்வரும் பாடலில் நாம் காணலாம் :

**அங்கண்விழ வில்பெருகு சண்பைஅகல் மூதூர்**
**சங்கபட கம்கருவி தாரை முதல் ஆன**
**எங்கணும் இயற்றுபவர் இன்றியும் இயம்பும்**
**மங்கலமுழக் குஒலி மலிந்தமறுகு எல்லாம் (பா.1936)**

மேலும், அவர், புகலியார் இறைவனை வணங்கும் போது சங்கங்களும் கோடுகளும் ஒலித்தன என்பதனை,

**சங்க நாதங்கள் ஒலிப்பத்**
**தழங்கு பொன் கோடு முழங்க . . .**

**மங்கல வாழ்த்துரை எங்கும்**
**மல்க மறை முன் இயம்ப (பா.2187)**

என்று பாடியுள்ளார்.

திருஞானசம்பந்தரின் திருமண நிகழ்வினைப் பற்றிக் கூறும்போது, சங்கு முதலான இசைக்கருவிகள் இசைக்கப்பட்டன என்பதைச் சேக்கிழார் எடுத்துரைக்கின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**சங்கொடு தாரை சின்னம்**
**தனிப் பெரும் காளம் தாளம்**
**வங்கியம் ஏனை மற்றும்**
**மலர்துளைக் கருவி எல்லாம்**
**பொங்கிய ஒலியின் ஓங்கிப்**
**பூசுரர் வேத கீதம்**
**எங்கணும் எழுந்து மல்கத்**
**திருமணம் எருந்தது அன்றேமு (பா.3102)**

இவ்வாறு "சங்கு" பற்றிய பல செய்திகளைச் சேக்கிழார் எடுத்து இயம்பியுள்ளார். அடுத்து, சேக்கிழார் இயம்பியுள்ள துடி, துந்துபி முதலானவற்றைப் பற்றிய செய்திகளைப் பார்ப்போம்.

## 6. துடி, துந்துபி முதலியவை

கண்ணப்ப நாயனாரின் வாழ்க்கை வரலாற்றினை எடுத்து இயம்பும்போது, உடுக்கை அல்லது துடி போன்ற கால்களை உடைய யானைக் கன்றுகளை வேட்டையாடமாட்டார்கள் என்று சேக்கிழார் கூறுகிறார். அவரது பாடல்வரி பின்வருமாறு :

**துடிஅடியென மடிசெவியென துறுகயமுனி தொடரார்**
**(பா.735)**

திருநாவுக்கரசரின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறுமிடத்து, திருவதிகை வீரட்டானத்தில் 'துடி' மற்றும் "துந்துபி" முழங்கியதைக் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**பரசும் கருணைப் பெரியோன் அருளப்**
**பறிபுன் தலையோர் நெறி பாழ் பட வந்து**
**அரசு இங்கு அருள் பெற்று உலகு உய்ந்தது எனா**
**அடியார் புடைசூழ் அதிகைப்பதிதான்**
**முரசம் படகம் துடி தண்ணுமை யாழ்**
**முழவம் கிளை துந்துபி கண்டையுடன்**
**நிரை சங்கு ஒலி ஓங்கும் முழங்குதலால்**
**நெடுமா கடல் என்ன நிறைந்துளதே (பா.1346)**

காரைக்கால் அம்மையாரின் வாழ்க்கை வரலாற்றை எடுத்து இயம்பும்போது, அம்மையார் பேய்வடிவம் எடுத்தபோது 'துந்துபி' முழங்கியதாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**மலர்மழை பொழிந்தது எங்கும்**
**வான துந்துபியின் நாதம்**
**உலகு எலாம் நிறைந்து விம்ம**
**உம்பரும் முனிவர் தாமும்**
**குலவினர் கணங்கள் எல்லாம்**
**குணலை இட்டனமுன் நின்ற**
**தொலைவு இல்பல் சுற்றத்தாரும்**
**தொழுது அஞ்சி அகன்று போனார் (பா.1772)**

சண்பை நகர் எனப்படும் சீர்காழியில் 'தேவதுந்துபி' ஒலித்ததைச் சேக்கிழார்,

**தம்திருமாளிகையின் கண் எழுந்தருளிப்**
**புகும்பொழுது சங்கநாதம்**
**அந்தர துந்துபி முதலா அளவு இல்பெருகு**
**ஒலிதழைப்ப அணைந்து புக்கார்**
**சுந்தரப்பொன் தோணிமிசை இருந்த பிரா**
**னுடன் அமர்ந்த துணைவி யாரும்**
**பைந்தொடியாள் திருமுலையின் பால்அறா**
**மதுர மொழிப் பவள வாயார் (பா.2001)**

என்று தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

திருஅரத்துறையில், சண்பை ஆண்டகையார்க்கு வரவேற்புத் தரும்போது "துந்துபி" ஒலித்தது எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**சங்கு துந்துபி தாரைபேரி இம்முதல்**
**பொங்கு பல்இய நாதம் பொலிந்து எழ**
**அங்கணன் அருளால் அவை கொண்டுஉடன்**
**பொங்கு காதல் எதிர் கொளப் போதுவார் (பா.2106)**

திருஆலவாய் அமர்ந்த இறைவனை வணங்க ஞானசம்பந்தர் சென்றபோது, அவரை வரவேற்கத் "துந்துபிகள்" முழங்கியதைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**துந்துபிகள் முதலாய துரியங்கள் கிளராமே**
**அந்தணர்ஆம் மாதவர்கள் ஆயிரம் மாமறை**
**எடுப்ப**

**வந்து எழும் மங்கல நாதம் மாதிரம்உள் படமுழங்கச்**
**செந்தமிழ் மாருதம் எதிர்கொண்டு**
**எம்மருங்கும் சேவிப்ப**
**(பா.2552)**

“ஐவகை நாதம்” என்ற சொல் சேக்கிழாரின் பல பாடல்களில் வருகின்றது. “ஐவகை நாதம்” என்பது பஞ்ச துந்துபிகளையும் குறிக்கும் என்பது அறிஞர்களின் கருத்து. “ஐவகை நாதத்தைச்” சேக்கிழார் சேரமான் பெருமாள் நாயனாரைப் பற்றிக் கூறும்போது குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**ஏற்ற தொண்டரை அண்டர் வெள்**
**ளானையின் எதிர்வலம் கொண்டு ஏற்ற**
**நால் தடங் கடல் முழக்கு என**
**ஐவகை நாதம் மீது எழுந்து ஆர்ப்பப்**
**போற்றி வானவர் பூ மழை**
**பொழிந்திடப் போதுவார் உயிர் எல்லாம்**
**சாற்றும் மாற்றங்கள் உணர் பெருந்**
**துணைவரை மனத்தினில் கொடு சார்ந்தார்**
**(பா.4267)**

அடுத்து, சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணத்தில் உள்ள குழல் பற்றிய செய்திகளை ஒரு சிறு ஆய்வு செய்யலாம்.

**7. குழல்**

மழ நாட்டில் திருமங்கலம் என்னும் பகுதியில் ஆயர் குலத்தில் தோன்றியவர் ஆனாய நாயனார். அவர் திரு நீற்றிடத்திற் பேரன்பு வாய்ந்தவர். அப் பெரியார் பசுக்கூட்டங்களைக் காத்து வந்தார். ஆனிரை மேய்க்கும் போது அவர் குழல் இசைத்தார். சிவபெருமானிடம் அன்பு பூண்ட அவர் அஞ்செழுத்தை இசையால் அமைத்து இசைத்தார்.

ஆனாய நாயனாரின் வரலாற்றினைக் கூறுமிடத்து, சேக்கிழார் புல்லாங்குழல் பற்றிய செய்திகளை விரிவாகக் கூறியுள்ளார்.

சிவபெருமானிடத்து அன்பு பூண்ட ஆனாய நாயனார் இன்னிசை ஒலிக்கும் குழலை இசைத்ததைச் சேக்கிழார் தமது பின்வரும் பாடலில் குறிப்பிட்டுள்ளார் :

**ஆவின் நிரைக் குலம் அப்படி பல்க அளித்து என்றும்**
**கோவலர் ஏவல் புரிந்திட ஆயர் குலம் பேணும்**

**காவலர் தம்பெருமான அடி அன்புறு கானத்தின்**
**மேவு துளைக் கருவிக்குழல் வாசனை மேல்**
**கொண்டார்**
**(பா.942)**

மேற்கண்ட பாடலில், "குழல்", ஒரு துளைக்கருவி என்று சேக்கிழார் கூறுகிறார்.

இசைக்கருவிகள் பற்றிய செய்திகள் மட்டுமன்றி இசைக் கருவிகளைச் செய்யும் முறைகளையும் சேக்கிழார் கொடுத்துள்ளார். அவ்வகையில் "குழல்" செய்யும் முறை பற்றி எடுத்துக் கூறியுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**முந்தை மறை நூல் மரபின் மொழிந்தமுறை**
**எழுந்தவேய்**
**அந்தம் முதல் நால் இரண்டில் அரிந்து நரம்பு உறு**
**தானம்**
**வந்த துளை நிரை ஆக்கி வாயு முதல் வழங்கு துளை**
**அந்தம் இல் சீர் இடையீட்டின் அங்குலி எண்களின்**
**அமைத்து**
**(பா.943)**

"**முந்தை மறை நூல்**" என்பது "**காந்தருவ வேதமாகும்**". கந்தவர்கள் இசையில் விற்பன்னர்கள். அவர்கள் ஏற்படுத்தியதே காந்தர்வ வேதமாகும்.

**காந்தருவ வேதம்** என்ற நூலில் கூறப்பட்டுள்ள முறைப்படி குழலானது செய்யப்பட்டது. வளர்ந்த மூங்கில் மரத்தைத் தேர்ந்தெடுத்து நுனியில் நான்கு பங்கும் அடியில் இரண்டு பங்கும் அறுத்து நடுப்பாகத்தை எடுத்து மெட்டுக்களிருக்க வேண்டிய இடங்களில் துளைகளை வரிசையாகச் செய்ய வேண்டும். முதலில் வாய் துளையை அமைக்க வேண்டும். பின்பு மற்ற துளைகளை ஒவ்வொன்றிற்கிடையேயும் ஒவ்வோர் அங்குலம் இடைவெளி விட்டுத் துளைகள் இட வேண்டும். '**குழல்**' என்று கூறப்படும் '**வங்கியம்**' செய்வதற்கு மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலி என ஐந்துமரங்களையும் பயன்படுத்தலாம். இவற்றில் மூங்கிலாற் செய்வது உத்தமம், வெண்கலத்தால் செய்வது மத்திமம், மற்றவை அதமம் என்று கூறப்படுகின்றது.

மூங்கில் பொழுது செய்யும். வெண்கலம் வலிது.
மரம் எப்பொழுதும் ஒத்து நிற்கும். இக்காலத்துக்
கருங்காலி, செங்காலி, சந்தனம் இவற்றாற்

> கொள்ளப்படும். கருங்காலி வேண்டுமென்பது பெருவழக்கு. இவை கொள்ளுங்கால் உயர்ந்த, ஒத்த நிலத்திற்பெருக வளர்ந்து நாலு காற்று மயங்கின் நாதமில்லையா மாதலான் மயங்கா நிலத்தின்கண் இளமையும் நெடும் பிராயமுமின்றி ஒரு புருடாய்ப்புக்க பெரிய மரத்தை வெட்டி ஒரு புருடாகாரமாகச் செய்து அதன் நிழலிலே ஆறஇட்டுவைத்துத் திருகுதல், பிளத்தல் போழ்ந்து படுதல் செய்கையறிந்து, ஓர் யாண்டு சென்ற பின் இலக்கணம் பிறழாது வங்கியம் செய்யப்படும். இதன் நீளம் இருபது விரலளவு இருக்க வேண்டும். சுற்றளவு நாலரைவிரல் அளவு இருக்க வேண்டும். இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஒரு பாதி மரநிறுத்திக் கடைந்து வெண்கலத்தாலே அணைசு பண்ணி இடமுகத்தை அடைத்து வலமுகம் வெளியாக விடப்படும்.

என்று அடியார்க்கு நல்லார் விளக்கியுள்ளதைச் சேக்கிழார் தமது பாடலில் எடுத்து இயம்பியுள்ளார். இவ்வாறு செய்யப்பட்ட குழலை இசைக்கும் முறையினைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

> **எடுத்தகுழல் கருவியினில் எம்பிரான் எழுத்து அஞ்சும்**
> **தொடுத்த முறை ஏழ் இசையின் சுருதிபெற வாசித்துத்**
> **தடுத்தசரா சரங்கள் எலாம் தங்க வரும் தம் கருணை**
> **அடுத்த இசை அமுது அளித்துச் செல்கின்றார்**
> **அங்குஒருநாள்**
> **(பா.944)**

வலிவு, மெலிவு, சமன் என்னும் மூவகைச் சுருதிகளும் பிறழாமல் தடுத்து நிறுத்திச் சிவபெருமானின் ஐந்தெழுத்தை வாசித்த பிறகு, ஏழ் இசை வாசிக்கப்படுவதாகச் சேக்கிழார் கூறியுள்ளார். ஐந்தெழுத்து என்பது **'நமசிவாய'** என்பதாகும். இதற்கு ஒத்த ஐந்திசைப் பண்ணாக **"முல்லைப்பண்"** கூறப்படுகிறது. இதன்பின் ஏழிசை அமைந்த வெவ்வேறு பாலைகளை ஆனாய நாயனார் இசைத்ததைச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

அன்பு மிகுதியால் **"அமுதம்"** என ஆனாய நாயனார் குழலிசைத்ததைச் சேக்கிழார்,

> **அன்பு ஊறி மிசைப்பொங்கும்**
> **அமுத இசைக் குழல் ஒலியால்**

**வன்பூதப் படையாளி எழுத்து**
**ஐந்தும் வழுத்தித்தாம்**
**முன்பு ஊதி வரும் அளவின்**
**முறைமையே எவ்வுயிரும்**
**என்புஊடு கரைந்து உருக்கும்**
**இன்னிசை வேய்ங் கருவிகளில் (பா.952)**

என்று குறிப்பிடுகின்றார். எவ்வுயிரையும் உருக்கும் ஆற்றல் வாய்ந்த இசையாக ஆனாய நாயனாரின் குழலிசை இருந்தது.

ஏழு துவாரங்களையுடைய வங்கியத்தில் இசைப்பதற்காக உள்ள எட்டாவது துளையில் உதட்டினை வைத்துக் குழலிசைத்ததை,

**ஏழுவிரல் இடையிட்ட**
**இன்இசை வங்கியம் எடுத்துத்**
**தாழும் அவர் வரிவண்டு**
**தாதுபிடிப் பனபோலச்**
**சூழும் முரன்று எழநின்று**
**தூய பெருந் தனித்துளையில்**
**வாழிய நம் தோன்றலார்**
**மணி அதரம் வைத்து ஊத (பா.953)**

என்று சேக்கிழார் பாடியுள்ளார். இடக்கையில் பெருவிரல் மற்றும் சிறுவிரல் நீக்கி மற்ற மூன்று விரல்களும், வலக்கையில் பெருவிரல் நீக்கி மற்ற நான்கு விரல்களும் குழல் இசைப்பன, என்று அடியார்க்கு நல்லார் தமது சிலப்பதிகார உரையில் கூறுகின்றார். கைவிரல்களால் **"தாது பிடிப்பன போல"**க் குழலை இசைத்ததைச் சேக்கிழாரும் தமது பாடலில் குறிப்பிடுகின்றார்.

**முத்திரையே முதல் அனைத்தும்**
**முறைத்தானம் சோதித்து**
**வைத்ததுளை ஆராய்ச்சி**
**வக்கரனை வழிபோக்கி**
**ஒத்த நிலை உணர்ந்ததன்பின்**
**ஒன்று முதல் படி முறையாகும்**
**அத்தகைமை ஆரோசை**
**அமரோசைகளின் அமைத்தார் (பா.954)**

**'முத்திரை'** என்பது **'வாய் துளை'** என்று சொல்லப்படும் எட்டாவது துளையாகும். மற்ற விரல் துளைகளைச் சோதித்து, அவைகளின் வழி இராக சோதனை அறிய விரல்களை முறையே செலுத்தி, முதல் சுரம் முதல் இறுதி சுரம் வரை, அதாவது சட்சம் முதல் நிஷாதம் வரை, ஏழு

துளைகளிலும் ஆரோசை மற்றும் அமரோசை பிறக்குமாறு குழல் வாசிக்கப்படுகின்றது என்று குறிப்பிடுகின்றார். எந்த இராகத்தினை நாம் எடுத்துக் கொண்டாலும் அந்த இராகத்திற்குரிய சுரங்கள் மட்டுமே ஒலிக்கப்பட வேண்டும். அவ்வாறு சுரங்கள் ஒலிப்பதற்காக ஆரோசை மற்றும் அமரோசை பயன்படுத்தப்படுவதைச் சேக்கிழார் இப்பாடலில் அமைத்துள்ளார். இதன் பிறகு பண் பிறக்கும் முறையைப் பாடல் மூலம் விளக்குகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**ஆய இசைப் புகல் நான்கின்**
**அமைந்த புகல் வகை எடுத்து**
**மேய துளை பற்றுவன**
**விடுப்பனவாம் விரல் நிறையின்**
**சேய ஒளி இடைஅலையத்**
**திருவாளன் எழுத்து அஞ்சும்**
**தூய இசைக்கிளை கொள்ளும்**
**துறை அஞ்சின் முறைவிளைத்தார்** **(பா.956)**

பண், பண்ணியல், திறம், திறத்திறம் ஆகியவை இசைப் புகல் எனப்படும். இதிலே கோடிப்பாலையில் அமைந்த பண்ணின் திறத்தை எடுத்து, ஆயத்தம், எடுப்பு, உற்கிரகம், சஞ்சாரம், இடாயம் முறையே விரல் அமைத்து உதிக்கும் ஒளியினை வங்கியத்தில் சிவபெருமானின் ஐந்தெழுத்து வாசிக்கப்பட்டதாகக் கூறுப்படுகின்றது. ஐந்தெழுத்தாக இசைக்கப்பட்டது முல்லைப் பண்ணாகும். இதன் பிறகு மற்ற இசைத் தொழில் முறைகளை வாசிக்கும் விதத்தையும் சேக்கிழார் விளக்குகின்றார்.

**மந்தரத்தும் மத்திமத்தும்**
**தாரத்தும் வரன் முறையால்**
**தந்திரிகள் மெலிவித்தும்**
**சமம் கொண்டும் வலிவித்தும்**
**அந்தரத்து விரல் தொழில்கள்**
**அளவு பெற அசைத்து இயக்கிச்**
**சுந்தரச் செங்கனிவாயும்**
**துளைவாயும் தொடக்குண்ண** **(பா.957)**

மந்தரம்–படுத்தலோசை, மத்திமம்–நலிந்த ஓசை, தாரம்–எடுத்தல் ஓசை போன்ற இசைகள் எழும் விரல் தொழில்கள் அளவு பெறச் சுரங்கள் அசைத்துத் துளைகளில் வாசிக்கப்படுகின்றன எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

முல்லைப்பண்ணிற்குரிய சுரங்கள் ச, ரி, க, ப, த, ஆகும். விரல்களை அசைப்பதனால் சுரங்களும் அசைத்து இசைக்கப் படுகின்றன. இவ்வாறு அசைத்து இசைப்பதால் அனைத்து நுண்

அசைவுகளும் இசைக்கப்பட்டன என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

பலவகை வண்ணங்களை மூன்று நடைகளிலும் இனிமையாக ஆனாய நாயனார் இசைத்ததைச் சேக்கிழார்

**எண்ணிய நூல் பெருவண்ணம்**
**இடை வண்ணம் வனப்பு என்னும்**
**வண்ண இசை வகை எல்லாம்**
**மாதுரிய நாதத்தில் ... (பா.958)**

என்று குறிப்பிடுகின்றார்.

ஆனாய நாயனாரின் குழல் இசை அமுதென இருந்தது எனச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

**வள்ளலார் வாசிக்கும்**
**மணித்துளைவாய் வேய்ங்குழலின்**
**உள்ளுரை அஞ்செழுத்து**
**ஆக ஒழுகி எழும் மதுரஒலி**
**வெள்ளம் நிறைந்தெவ் உயிர்க்கும்**
**மேல் அமரர் தரு விளை தேன்**
**தெள் அமுதின் உடன் கலந்து**
**செவி வார்ப்பது எனத் தேக்க (பா.959)**

அஞ்செழுத்தை ஒலித்ததால் குழல் ஒலி தெள்ளமுதாக இருந்தது என்று ஈண்டுப் பொருள் கொள்ளத் தக்கது. தேவமகளிரும் இவரது குழலிசையைக் கேட்டதைச் சேக்கிழார்,

**சுரமகளிர் கற்பகப்பூஞ்**
**சோலைகளின் மருங்கு இருந்து**
**கரமலரின் அமுதுஊட்டும்**
**கனிவாய் மென் கிள்ளையுடன்**
**விரவு நறுங் குழல் அலைய**
**விமானங்கள் விரைந்து ஏறிப்**
**பரவிய ஏழிசை அமுதம்**
**செவி மடுத்துப் பருகினார் (பா.963)**

என்று குறிப்பிடுகின்றார்.

ஆனாய நாயனாரின் குழலின்கண் பிறந்த இசைக்கு ஒரு வாசம் இருந்தது எனவும், அது மனதை உருக்கியது எனவும், சேக்கிழார் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**இவ்வாறு நிற்பனவும்**
**சரிப்பனவும் இசை மயமாய்**

**மெய் வாழும் புலன்கரணம்**
**மேவிய ஒன்றாயினவால்**
**மொய்வாச நறுங்கொன்றை**
**முடிச்சடையார் அடித்தொண்டர்**
**செவ்வாயின் மிசை வைத்த**
**திருக்குழல் வாசைன உருக்க (பா.966)**

ஆனாய நாயனாரின் குழலிசை வையத்தையும் வானத்தையும் தன்மயம் ஆக்கியது என்றும் பொன்னம்பலத்தில் உறையும் இறைவனிடம் அவ்விசை சென்று சேர்ந்தது என்றும் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**மெய்அன்பர் மனத்து அன்பின்**
**விளைத்த இசைக் குழல் ஓசை**
**வையம் தன்னையும் நிறைத்து**
**வானம் தன்மயம் ஆக்கிப்**
**பொய் அன்புக்கு எட்டாத**
**பொன் பொதுவில் நடம்புரியும்**
**ஐயன்தன் திருச்செவியின்**
**அருகு அணையப் பெருகியதால் (பா.967)**

குழலிசை கேட்ட இறைவன், தனது மதிசூடிய சடை தாழத் தலையைத் தாழ்த்தி, இசையை மேலும் நுகர்ந்தார், என்று சேக்கிழார் கூறுகின்றார். அப்பாடல் பின்வருமாறு :

**ஆனாயர் குழல் ஓசை**
**கேட்டருளி அருள் கருணை**
**தான்ஆய திரு உள்ளம்**
**உடையதவ வல்லியுடன்**
**கானாதி காரணர் ஆம்**
**கண்ணுதலார் விடை உகைத்து**
**வான்ஆறு வந்து அணைந்தார்**
**மதிநாறும் சடைதாழ (பா.968)**

ஆனாய நாயனாரின் இசையைக் கேட்க, கணநாதன் மட்டுமின்றி, தேவர்கள் அனைவரும் ஒருவர்மீது ஒருவர் விழுந்து அவ்விசையைப் பருக வந்தனர். வேற்று ஓசை எனப்படும் அபசுரங்கள் கலக்காமல் குழலிசைத்தார். அதனைக்கேட்டுச் சிவபெருமான் அவர்முன்பு காட்சி அளித்தார். சேக்கிழார் இதனைத் தமது பின்வரும் பாடலில் குறிப்பிட்டுள்ளார் :

**திசைமுழுதும் கணநாதர்**
**தேவர்கட்கு முன் நெருங்கி**

**மிசைமிடைந்து வரும்பொழுது**
**வேற்று ஒலிகள் விரவாமே**
**அசைய எழும் குழல் நாதத்து**
**அஞ்செழுத்தால் தமைப் பரவும்**
**இசை விரும்பும் கூத்தனார்**
**எழுந்தருளி எதிர் நின்றார் (பா.969)**

குழலிசையைக் கேட்ட இறைவன் **"இந்த நிலையிலேயே என்னிடத்தில் வந்து சேருவாய்"** என்று கூறும் பாடல் பின்வருமாறு:

**முன்நின்ற மழவிடைமேல்**
**முதல்வனார் எப்பொழுதும்**
**செந்நின்ற மனப்பெரியோர்**
**திருக்குழல் வாசனை கேட்க**
**இந்நின்ற நிலையே நம்பால்**
**அணைவாய் என அவரும்**
**அந்நின்ற நிலை பெயர்ப்பார்**
**ஐயர்திரு மருங்கு அணைந்தார் (பா.970)**

இக்காட்சியினைக் கண்டு விண்ணவர்கள் பூமாரி பொழிந்தனர். முனிவர்கள் புகழ்ந்தனர். அப்போது, ஆனாய நாயனார் அகம், புறம், அருகியல், பெருகியல் முதலியவை வரும்படி குழலிசைத்ததைச் சேக்கிழார் தமது பாடலில் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**விண்ணவர்கள் மலர்மாரி**
**மிடைந்து உலகம் மிசை விளங்க**
**எண்ணில் அரு முனிவர் குழாம்**
**இருக்கு மொழி எடுத்து ஏத்த**
**அண்ணலார் குழல் கருவி**
**இருகு இசைத்து அங்குஉடன் செல்லப்**
**புண்ணியனார் எழுந்தருளிப்**
**பொன் பொதுவினிடைப் புக்கார் (பா.971)**

இவ்வாறு ஆனாய நாயனாரின் வாழ்க்கை வரலாற்றில் மிக அழகாகக் குழலைப் பற்றிச் சேக்கிழார் கூறியுள்ளார்.

திருக்குறிப்புத் தொண்ட நாயனாரின் வாழ்க்கை வரலாற்றினைக் கூறும்போது வண்டுகளின் ரீங்காரம் குழலிசையை ஒத்திருந்ததைச் சேக்கிழார்,

**குழல் செய் வண்டினம் ... (பா.1092)**

என்று குறிப்பிடுகின்றார்.

ஞானசம்பந்தரின் திருமணத்தின் போது குழல் ஒலித்ததைச் சேக்கிழார்

**. . .வங்கியம் ஏனை மற்றும்**
**மலர்துறைக் கருவி எல்லாம்**
**பொங்கிய ஒலியின் ஓங்கிப்**
**பூசுரர் வேத கீதம்**
**எங்கணும் எழுந்து மல்கத்**
**திருமணம் எழுந்தது அன்றே (பா.3102)**

என்று குறிப்பிடுகின்றார். **"வங்கியம்"** என்றார் **"குழல்"** என்று பொருள். **"பெருவங்கியம்"** என்பது நாதசுரத்தைக் குறிக்கும். கம்பரும் **"வங்கியம் பல தேன் விளம்பின"** என்று பாடியது ஈண்டு நினைவு கூரத்தக்கது.

இவ்வாறு சேக்கிழார் பல்வேறு இடங்களில் புல்லாங்குழல் பற்றிய செய்திகளைக் கூறியுள்ளார்.

அடுத்து அவர் கூறியுள்ள காளம், சிலம்பு போன்றவற்றினைப் பற்றிய செய்திகளைப் பார்ப்போம்.

**8. காளம், சிலம்பு, டமருகம் முதலானவற்றைப் பற்றிய குறிப்புகள்**

**"காளம்"** என்பது கோவிலில் இசைக்கப்படும் ஓர் இசைக் கருவியாகும். இது ஒருவகை காற்றுக் கருவியாகும். **"சிலம்பு"** கால்களில் அணியப்படும். **"உடுக்கை", "டமருகம்"** போன்றவை சிவபெருமானின் கையில் இருக்கும் தாளக் கருவிகளாகும். இவற்றினைச் சேக்கிழார் எவ்வாறு தமது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார் என்பதனைக் காண்போம்.

ஞானசம்பந்தரை வரவேற்கத் திருக்கோடிக் குழக்கரையில் **"காளம்"** இசைக்கப்பட்டதை,

**... சங்கம் படகம் பேரி தாரை காளம் (பா.2523)**

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

**"காளம்"** என்ற வாத்தியம் பல்லியத்தில் இடம் பெற்றிருந்தாலும் அதனைப் பற்றிய தனியான குறிப்பு, ஒரே ஓர் இடத்தில் மட்டுமே இடம்பெறுகிறது. ஞானசம்பந்தர் திருஆலவாயினை அடைந்தபோது அவரை வரவேற்கக் **"காளம்"** ஒலித்ததாகச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**இப்பரிசு அணையும் சண்பையர் பெருமான்**
**எழுந்தருளும் பொழுது இசைக்கும்**

**ஒப்புஇல் நித்திலப் பொன்தனில் பெருங்காளம்**
**உலகுஉய்ய ஒலித்து எழும் ஓசை ... (பா.2557)**

மேலும் திருஆலவாயில் இறைவனின் கோவிலில் **"காளம்"** ஒலித்ததை

**... எல்லைஇல் முத்தின் காளம்**
**தாரை சங்கு எங்கும் ஓத ... (பா.2646)**

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். சம்பந்தரின் திருமணத்தின் போது காளம் ஒலித்ததை

**... ஏர் அணி காளம் சின்னம்**
**இலங்கு ஒளித் தாரை எல்லாம்**
**பேர் ஒலி பெருக ... (பா.3123)**

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

சிவபெருமானின் வலக்கையில் **"டமருகம்"** உண்டு. சிறுத்தொண்டரின் வரலாற்றினைக் கூறுமிடத்து, சிவபெருமானைச் சேக்கிழார் வருணனை செய்கிறார். அப்போது சிவனார் தமது வலக்கையில் டமருகம் இசைத்ததைச் சேக்கிழார்

**...தயங்கு சுடர் வலத்திருக்கைத் தமருகத்தின்**
**ஒலி தழைப்ப... (பா.3698)**

என்று குறிப்பிடுகின்றார்.

சிலம்பைப் பற்றிச் சேக்கிழார் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். முதல் பாடலிலேயே சிலம்பைக் குறிப்பிடுகின்றார். அப்பாடல் பின்வருமாறு:

**உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்**
**நிலவு லாவிய நீர்மலி வேணியன்**
**அலகில் சோதியின் அம்பலத்து ஆடுவான்**
**மலர்சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம் (பா.1)**

தடுத்தாட்கொண்ட புராணத்தில் **"சிலம்பு"** ஒலித்ததை,

**வையகம் பொலிய மறைச் சிலம்பு ஆர்ப்ப ...**
**(பா.251)**

என்று சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். மேலும் சிலம்புகள் ஒலித்ததை,

**அளி சிலம்பு அடிகள் பார் வென்று**
**அடிப்படுத்தனம் என்று ஆர்ப்ப... (பா.284)**

என்று சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு சிலம்பு, காளம், டமருகம் போன்றவற்றைச் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார்.

**9. சேக்கிழார் கூறியுள்ள ஆடல் பற்றிய செய்திகள்**

பெரியபுராணம் என்று சொல்லப்படும் இக்காவியத்தின் நாயகன் சிவபெருமான் ஆவார். இவர் தொழிலே ஆடல் புரிதலாகும். எனவே இப்புராணத்தில் ஆடல் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளதில் வியப்பில்லை என்றே கூறலாம்.

இயற்கைக்கு வருணனையாய் அமையும் எறிபத்த நாயனார் பாடலில் யானை, மயில், மங்கையர், மற்றும் என்னென்ன ஆடுகின்றன என்பதைத் தம் பாடலில் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் பின்வருமாறு :

**கடகரி துறையில் ஆடும்**
**களிமயில் புறவில் ஆடும்**
**அடர்மணி அரங்கில் ஆடும்**
**அரிவையர் குழல் வண்டு ஆடும்**
**படர்ஒளி மறுகில் ஆடும்**
**பயில் கொடி கதிர் ஆடும்**
**தடநெடும் புவி கொண்டாடும்**
**தனி நகர் வளமை ஈதால்** **(பா.554)**

காரைக்கால் அம்மையார் வாழ்க்கையை எடுத்துரைக்கும் போது திருஆலங்காட்டில் இறைவன் ஆனந்தமாக நடனமாடியதைச் சேக்கிழார் தமது பாடலில் கூறுகிறார். அப்பாடல் பின்வருமாறு :

**ஆடுமா நடமும் நீ கண்டு**
**ஆனந்தம் சேர்ந்து எப்போதும்**
**கூடுமாறு அருள் கொடுத்துக்**
**குலவு தென்திசையில் என்றும்**
**நீடுவாழ் பழனமூதூர்**
**நிலவிய ஆலங்காட்டில்**
**பாடுவாய் நம்மை என்றான்**
**பரவுவார் பற்றாய் நின்றான்** **(பா.1782)**

இவ்வாறு **"ஆடல்"** பற்றிய குறிப்புகளைச் சேக்கிழார் பல்வேறு இடங்களில் விளக்கியுள்ளார்.

**"ஆடல்"** ஆடுவதற்குத் தேவாசிரியர் இருந்ததையும், தேவாசிரியர் மண்டபம் இருந்ததையும் சேக்கிழார் குறிப்பிட்டுள்ளார். **"தேவாசிரியர்கள்"** நட்டுவாங்கம் செய்யவும், பாடல்களைக் கற்றுக் கொடுக்கவும் நியமிக்கப்படுவர்.

கண் ஒளிகேட்டு, சிவக்கொழுந்தினைச் சுந்தரர் வணங்குமிடத்து, **"தேவாசிரியன்"**, பற்றிய குறிப்பினைச் சேக்கிழார் கொடுத்துள்ளார். அப்பாடல் பின்வருமாறு:

**காலம் நிரம்பத் தொழுது ஏத்திக்**
**கனக மணி மாளிகைக் கோயில்**
**ஞாலம் உய்ய வரும் நம்பி**
**நலம் கொள் விருப்பால் வலம் கொண்டு**
**மாலும் அயனும் முறை இருக்கும்**
**வாயில் கழியப் புறம் போந்து**
**சீலம் உடைய அன்பருடன்**
**தேவாசிரியன் மருங்க அணைந்தார்**

**(பா.3471)**

மேலும் தேவாசிரியனைத் தேவர்கள் வணங்கியதை

**தேவாசிரியன் முறை இருக்கும்**
**தேவர் எல்லாம் சேவித்து ...** **(பா.3491)**

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்.

கழறிற்றறிவார் நாயனாரின் சரித்திரத்தில் சுந்தரமூர்த்தி நாயனார் தேவாசிரியனை வணங்கியதைச் சேக்கிழார்

**சென்று தேவாசிரியனை முன்**
**இறைஞ்சித் திருமாளிகை வலம் கொண்டு**

**(பா.3820)**

என்று குறிப்பிட்டுள்ளார்.

இப்பாடல்கள் "தேவாசிரியன்" பற்றிய குறிப்புகளைத் தருகின்றன. இப்பாடல்களின் பொருளைப் படிக்கும் போது தேவாசிரியனுக்கு இருந்த நல்மதிப்பை நம்மால் உணரமுடிகிறது.

இவ்வாறு சேக்கிழார் தமது பாடல்களில் எண்ணிறந்த இசை மற்றும் இசைக் கருவிகளைப் பற்றிய குறிப்புகளை நமக்கு நல்கியுள்ளார்.

# பெரியபுராணப் பாடல்களும் இசையமைப்பும்

பெரியபுராணத்தின் பாடல்கள் அனைத்துமே இசையோடு பாடக்கூடிய பாடல்களாக அமையப் பெற்றுள்ளன. இவற்றிற்குச் சேக்கிழார் பெருமான் அமைத்த இசையமைப்பு இன்றுவரை நமக்குக் கிடைக்கவில்லை. எனவே, ஒருசில பாடல்களுக்கு இசையூட்டி அவற்றினைத் தக்க இசைக் குறியீடுகளுடன் இங்கு வழங்கியுள்ளேன். இசைவாணர்கள் இவற்றினைத் தமது வினிகைகளில் பாடி மக்களைத் தமிழ் இசை என்னும் இன்பத்தைப் பருகச் செய்யலாம்.

## 1. இயற்றியவர் சேக்கிழார்

**உலகுஎலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்**
**நிலவு உலாவிய நீர்மலி வேணியன்**
**அலகுஇல் சோதியன் அம்பலத்து ஆடுவான்**
**மலர்சி லம்புஅடி வாழ்த்தி வணங்குவாம்**

இராகம்: கம்பீரநாட்டை | பண்: நட்டபாடை

தாளம்: ரூபகம் | பாணி: மூன்றொத்து

ஏ: சகமபநிச்

இ: ச்நிபமகச

1. சா, –கமா–பா, –பபா மகாம –பா, –மபா;
உல. கெலாம் உணர்ந்து ஓதற்கு அரி யவன்
பழநிபம–பம–கபமகசா சகா –மபா, ம–பமகச
நிலவு உ. லாவி ய நீர் மலி வேணியன்

2. சா, –கமா–பா, –பபா மகாம –பா, –மபா;
உல கெலாம் உணர்ந்து ஓதற்கு அரி யவன்

பநிநிச்நி–பம–கபமகசா சகா–மபா–பா; ;
நிலவு உ லா விய நீர் மலி வேணியன்

பா, –மா, –மபா–நிச்ா ச்ா, –ச்ா, –நிச்ச்நிபா
அல கில் சோ. தியன் அம் பலத் தா.டுவான்
பநிச்ா;– நிச்ா நிபா கமபா; –கபமம கா
மலர் சிலம் படி வாழ்த்தி வணங்குவாம்

## 2. விநாயகர்

எடுக்கும் மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்
நடக்கும் மேன்மை நமக்கு அருள் செய்திடத்
தடக்கை ஐந்துஉடைத் தாழ்செவி நீள்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம் (பா.3)

இராகம்: சங்கராபரணம் பண்: பழம்பஞ்சுரம்
தாளம்: திச்ரதிருபுடை பாணி: ஏழாத்து
ஏ: சரிகமபதநிச்
இ: ச்நிதபமகரிச

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பாம | கம | பா | பமப | கா | மரி |
| எடுக்கும் | மா | கதை | இன்தமிழ் | செய் | யுளாய் |
| சரிக | மா | ; | மகம | பா | பா |
| நடக்கும் | மேன் | மை | நமக்கருள் | செய் | திட |
| மபா | தநி | ச்ா | ம்க்ரி | ச்ா | சர் |
| தடக்கை | ஐந் | துடைத் | தாள்செவி | நீள் | முடி |
| ச்நித | பா | பா | மகரி | சா | சா |
| கடக்க | ளிற் | றைக் | கருத்துள் | இருத் | துவாம் |

## 3. திருக்கூட்டம்

மதிவளர் சடைமுடி மன்றுளா ரைமுன்
துதிசெய்யும் நாயன்மார் தூய சொல்மலர்
பொதிநலன் நுகர்தரும் புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே (பா.4)

இராகம் : அம்சநாதம் ஏ: சரிமபநிச்
பாணி : எட்டொத்து இ: ச்நிபமரிச

| | | |
|---|---|---|
| பா மா ரீ சா ரீ மா பா; | ச்ா நீ பாமா | பாநீச்ா, |
| மதிவளர் சடைமுடி | மன்று. | ளாரைமுன் |
| நீ சர் ரீமர் ம்ரீச்ா; | ச்ா நீ பா மா | பா நீ ; |
| து தி செய்யும் நாயன்மார் | தூ ய சொல் | மலர் |
| ம்ர்ரீச்ாநீ ரீசர்நீபா | ச்ாநீ பா மா | பா நீசர் |
| பொதிநலன் நுகர்தரும் | புனிதர் பே. | . ரவை |
| ச்ாநீபாமா ரீமாபாபா | மா பா நீ பா | நீஸ்ாஸ்ா; |
| விதிமுறை உலகினில் | விளங்கி வெல் | . க வே |

**4.**

**பந்தம் வீடுதரும்பர மன்கழல்**
**சிந்தை ஆரவும் உன்னும்என் சிந்தையை**
**வந்து மால்செய்து மான்எனவே விழித்து**
**எந்தை யார்அருள் எந்நெறிச் சென்றதே (பா.300)**

இராகம்: பூபாளம்
பண்: புறநீர்மை
தாளம்: ஆதி
பாணி: எட்டொத்து
ஏ: சரிகபதச்
இ: ச்தபகரிச

| | | |
|---|---|---|
| , கபா ரிகா, பா பா – பா; | ;பப தபா, | பா ; தபகா |
| பந்தம் வீடு தரும் | ப. ரமன் | க ழல் |
| , கபா தபா, பகதப கபகரி | ;சரி கா; | பா;–; ; |
| சிந்தை ஆரவும் உன்.. னும்.. | என் | சிந்தையை |
| , பகா பதா; சர்; ச்ர்; | ;ச்ா–ரிசா | ச்ச்தா–தபா, |
| வந்து மால் செய் து | மான் என | வே விழித்து |
| , பதா –ச்ச்ா, – ச்ச்தாபா–,தபா | கபா–தபா–பக | தப கப கரிசா |
| எந்தை யார் அருள் எந் | நெறிச் சென் | ற. தே. . . . |

## 5. சுந்தரமூர்த்தி சுவாமிகள் துதி

**மலர்மிசை அயனும் மாலும் காணுதற்கு அரிய வள்ளல்**
**பலர் புகழ் வெண்ணெய்நல்லூர் ஆவணப் பழமைகாட்டி**
**உலகுய்ய ஆண்டு கொள்ளப் பெற்றவர் பாதம் உன்னித்**
**தலைமிசை வைத்து வாழும் தலைமைநம் தலைமைஆகும்**

**(பா.550)**

இராகம்: கேதாரகௌளை
தாளம்: ஆதி
பண்: காந்தாரப்பஞ்சமம்
பாணி: எட்டொத்து

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ; , ச் | ச்ச்நி, | ரிச்நித | பாபா | ;மப, தப, | தபமக ரீரீ |
| மலர் | மிசை | அயனும் | மாலும் | காணுதற்கு | அரிய வள்ளல்; |
| ;, ரி | ,பமக | ரிமகரி | சாசா | ;ரி, மாபா | மபநிச் நிதப, |
| பலர் | புகழ் | வெண்ணெய் | நல்லூர் | ஆ வணப் | பழமைகாட்டி |
| ;, ப | ;ச்நிதப | பநிச்ா | ரீரீ | ;க்ரி க்ரிக்ரி | ரிம்க்ரி சர்சர் |
| உல | குய்ய | ஆண்டு | கொள்ளப் | பெற் றவர் | பாதம்உன்னித் |
| ;, ப | , ரிச், | ரிச்நித | பாபா | ;பப, நிம, | பாநீ ச்ா; |
| தலை | மிசை | வைத்து | வாழும் | தலைமை நம் | தலைமை ஆகும் |

**6.**

**வேத ஓசையும் வீணையின் ஓசையும்**
**சோதி வானவர் தோத்திர ஓசையும்**
**மாதர் ஆடல் மணிமுழவு ஓசையும்**
**கீத ஓசையுமாய்க் கிளர்வு உற்றவே (பா.87)**

இராகம்: மோகனம் தாளம்: ஆதி

தாளம்: முல்லைப்பண் பாணி: எட்டொத்து

ஏ : சரிகபதச்

இ : ச்தபகரிச

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ; ச, | ரிகக | கா; | கா கா | ;ரிரி ககப, | பகதப கபகரி |
| வே | த | ஓ | சையும் | வீ ணையின் | ஓ சையும் |
| சரித, | ,சரி, | கா; | கா கா | ;, க, தப, | தச்தப கபகரி |
| சோ. | தி | வா | னவர் | தோத்திர | ஓ சையும் |
| சாகத | பகரீ | சா,த | ரிசதா | ,சரி, காகா | பா; பாபா |
| மா | தர் | ஆ. | டல் | மணிமுழவு | லு சையும் |
| ;பத | ச்தபக | பத,ச் | ;ச்ரி | ச்ரி,க் ரீச்சா | ச்தரிச் தபதா |
| கீ | த | ஓ | | சை | யுமாய்க் |
| ;த்ரி | ,ச்சா | ச்தரிச் | தபகா | பதத்ச் ;கப | தச்தப கபகரி |
| கிளர் | வு | உற் | ற | வே | |

**7.**

**ஞாலம் உய்ய நடம் மன்றுள் ஆடின**
**காலர் ஆர்உயிர் மாளக் கறுத்தன**
**மாலை தாழ்குழல் மாமலையாள் செங்கை**
**சீலம் ஆக வருடச் சிவந்தன (பா. 338)**

இராகம்: அம்சநாதம் தாளம் : மிச்ர சாபு

பாணி : ஏழொத்து

ஏ: சரிமபநிச்

இ: ச்நிபமரிச

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சா;ரீ | பாமா | பாபா | பா;பா | மாபா | நீநீ |
| ஞாலம் உய்ய | நடம் | | மன்றுள் | ஆ | டின |
| ச்ர்;ச்ர் | ச்ாநீ | பாபா | மாபா; | நீநீ | ச்ாசா |
| காலர் | ஆர் | உயிர் | மாளக் | கறுத் | தன |
| சர்;ரீ | ப்மார் | ரீசர் | ச்ா;ச்ச் | ச்நிரிச் | ச்ச்நீ |
| மாலெ | தாழ் | குழல் | மா மலை | யால் | செங்கை |
| சர்;சா | ச்நிபா | மா; | ச்நிபமரீ | சாநீ | ரீசா |
| சீலம் | ஆ | க | வருட | சிவந் | தன |

8.

ஆதிஆய் நடுவும் ஆகி
அளவுஇலா அளவும் ஆகி
சோதிஆய் உணர்வும் ஆகி
தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப்
பெண்ணும்ஆய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப்
பொதுநடம் போற்றி போற்றி (பா. 350)

இராகம்: பௌளி பண்: பௌரி

தாளம்: ஆதி பாணி: எட்டொத்து

| | | | |
|---|---|---|---|
| ;. காரிகா | பா; தபா | ;கதாபா | பகதபகபகரி |
| ஆதிஆய் | நடுவும்ஆகி | அளவிலா | அளவும்ஆகி |
| சாரிகபகரீ | சாநிதபாதா | ;சரிகாகா | பா, ப தாபா |
| சோதிஆய் | உணர்வும்ஆகி | தோன்றிய | பொருளும் ஆகிப் |
| கா,பா,தா | ச்சாச்சாச்சா | ச்சா, ரிச்சா | சர், நிதாபா |
| பேதியா | ஏகம்ஆகிப் | பெண்ணும்ஆய் | ஆணும் ஆகிப் |
| ; பாதரிச்சா | ச்சா, நிதாபா | ;கா, தபா | பகதப கபகரி |
| போதியா | நிற்கும் தில்லை | பொதுநடம் | போற்றி போற்றி |
| கா; ; ; | பாகாரீ, | காரீஸா; | ; ; ; ; |
| . . . . . | . . . . | . . . . | . . . . |

9.

கோடுமுன்பு ஒலிக்கவும் குறுங்கண் ஆகுளிக்குலம்
மாடுசென்று இசைப்பவும் மருங்கு பம்பை கொட்டவும்
சேடு கொண்டு கைவிளிச் சிறந்த ஓசை செல்லவும்
காடுகொண்டு எழுந்தவேடு கைவளைந்து சென்றதே

(பா 721)

இராகம்: மோகனம்
பண்: முல்லைப்பண்

தாளம்: ஆதிதாளம்
திச்ர நடை
பாணி: எட்டொத்து
மும்மை நடை

ஏ : சரிகபதச்
இ : ச்தபகரிச

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| காக | காக | காக | காக | சரிக பாக | | பாப பா, |
| கோடு | முன்பு | ஒலிக்க | வும் | குறுங்கண் ஆகு | | ளிக் குலம் |
| தாத | தாத | தாத | பாக | பதத சர்ாத | | சர்ச் சர், |
| மாடு | சென்று | இசைப்ப | வும் | மருங்கு பம்பை | | கொட்டவும் |
| கர்க் | ரீரி | சர்ச் | சர், | தர்ரி சர்த | | பாப தா, |
| சேடு | கொண்டு | கைவி | ளிச் | சிறந்த ஓசை | | செல்ல வும் |
| க்ாக் | ரீரி | ச்ாச் | தாப | தாச் தாப | | காப கரிச |
| காடு | கொண்டு | எழுந்த | வேடு | கைவ ளைந்து | | சென்ற தே |

## 10.

**சக்கரப் பள்ளியார் தம்திருக் கோயிலுள்**
**புக்கு அருத்தியினுடன் புனைமலர்த்தாள் பணிந்து**
**அக்கரைப் பரமர்பால் அன்புறும் பரிவுகூர்**
**மிக்கசொல் தமிழினால் வேதமும் பாடினார்**
**(பா. 2265)**

இராகம்: சங்கராபரணம் தாளம்: ஆதி

பண்: பழம் பஞ்சுரம் பாணி: எட்டொத்து

ஏ: சரிகமபதநிச்

இ: ச்நிதப மகரிச

| | | |
|---|---|---|
| ; , க ,மக, மகரி, ச, ச, | ;, ச, தநி, | சா ;சா; |
| சக் கரப் பள்ளி யார்தம் | திருக் | கோயிலுள் |
| ; சரி ,கம, பாபா பாபா | ;கம , பமக | மபமப; ; |
| புக்கு அருத் தியி னுடன் | புனைமலர்த் | தாள் பணிந்து |
| ;, ப ,கம, பதநி, ச்ாச்ா | ;ச், ,தநி, | ச்ா; ; ; |
| அக் கரைப் பரமர் பால் | அன் புறும் | பரிவுகூர் |
| ; தரி ,ச்ச், ச்நிதப பதநி, | ;ச்ரி நிதப, | கமதப மகரிச |
| மிக் கசொல் தமி. ழினால் | வேதமும் | பா டினார் |

**11.**

வருமுறைப் பிறவி வெள்ளம்
வரம்பு காணாது அழுந்தி
உருஎனும் துயரக் காட்டில்
உணர்வு இன்றி மயங்குவார்கள்
திருமணத்துடன் சேவித்து
முன்செலும் சிறப்பினாலே
மருவிய பிறவி நீங்க மன்னு
சோதியின் உள் புக்கார் (பா. 3152)

இராகம்: மாயாமாளவகௌளை தாளம்: ஆதி
பண்: இந்தளம் பாணி: எட்டொத்து

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ; , ச | , ரிகரி | கமம, மாமா | ; கம ப, | தபம, | ம,மக தபத, | |
| வரு | முறைப் | பிறவி வெள்ளம் | வரம்பு கா | | ணாது அழுந்தி | |
| ; , ம | , மம, | பப,த பாபா | மபாப தபமா | | ;பம கரிச | |
| உரு | எனும் | துயரக் காட்டில் | உணர்வு இன்றி | | மயங்குவார்கள் | |
| ;, த | ,தத, | நிநிநி, ச்ாச்ா | ;நிச்ச, தநி, | | ச்ா,நிதா; | |
| திரு | மணத் | துடன் சேவித்து | முன் செலும் | | சிறப்பினாலே | |
| ச்ா,ம் | க்ரிச், | ச்ரி,ரி ச்நிதா | ;,ச் நிதப, | | ச்நிதா நீசர் | |
| ம ரு | விய | பிறவி நீங்க | மன் னு | | சோ தியின் | |
| ;, ப | தபா, | மகபம மகரீ | பமகரி சா; | | ; ; ; ; | |
| சோ | தியின் | உள். . . . . | புக்கார் | | | |

## 12.

**களமர் கட்ட கமலம் பொழிந்த தேன்**
**குளம் நிறைப்பது கோல் ஒன்றில் எண்திசை**
**அளவும் ஆணைச் சயத்தம்பம் நாட்டிய**
**வளவர் காவிரி நாட்டு வரிஞ்சையூர் (பா. 4045)**

| | |
|---|---|
| இராகம்: அடாணா | தாளம்: ஆதி |
| பண்: யாழ்முரி | பாணி: எட்டொத்து |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ; ப ப | ,மரிம | பா; | பாபா | ;நிப, பப, | பா,நி நிபம |
| கள | மர் | கட் | ட | கமலம் | பொழிந்த தேன் |
| ; மப , | ரிச், | ச்ாச்ா | ச்ாச்ா | ;ச்ச்ாச்சர் | ரிச்நிப தநிபா |
| குளம் | நிறைப் | பது | கோல் | ஒன்றில் | எண் திசை |
| ;க்ம் , | ரிச் | ச்ா; | ச்ாச்ா | ;ச்ா,ச்சா | ச்நிரிச் நிச்தா |
| அள | வும் | ஆணை | | சயத்தம்பம் | நாட் டிய |
| ;தத | ,தத, | தா; | தாதா | ;பதாநிச்ா | ச்நிபாா தநிபா |
| வள | வர் | கா | விரி | நாட் டு | வரிஞ் சையூர் |

## 13.

மன்னுசீர் மயிலைத் திருமா நகர்த்
தொன்மை நீடிய சூத்திரத் தொல்குல
நன்மை சான்ற நலம்பெறத் தோன்றினார்
தன்மை வாயிலார் என்னும் தபோதனர் (பா.4089)

இராகம்: ஆனந்தப்பயிரவி தாளம்: ஆதி

பண்: சாளரபாணி பாணி: எட்டொத்து

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ; கம | ,பப, | பாபா | பா; | ; கம | ,பம, | பமகரி | கா; |
| மன் | னுசீர் | மயி | லைத் | திரு | மா | நகர்த் | |
| ; கம | ,பப, | பமகரி | சாசா | ;சக | ரிக, ரி | சா; ; | |
| தொன் | மை | நீ | டிய | சூத்திரத்தொல் | | குல | |
| ; பப | ,பபம | பாச்ா | ச்நிநீ | ;ச்ம் | ,க்ரி, | ச்நிநி, | ச்ாச்ா |
| நன் | மை | சான் | ற | நலம் | பெறத் | தோன் | றினார் |
| ;ப, | ச்ாச்ா | ரிச்நித | பாபா | ;கம | ப,ம, | பமகரி | கா; |
| தன் | மை | வா | யிலார் | என் | னும் | தபோ | தனர் |
| பமகரி | சாநீ | சா; | சா; | ; ; | ; ; | ; ; ; ; | |

## 14.

அருமறை மரபு வாழ
அப்பதி வந்து சிந்தை
தரும் உணர்வு ஆனஎல்லாம்
தம்பிரான் கழல்மேல் சார
வருநெறி மாறு அன்பு
வளர்ந்து எழ வளர்ந்து வாய்மைப்
பொருள் பேறு வேத நீதிக்
கலை உணர் பொலிவின் மிக்கார் (பா. 4178)

இராகம்: மோகனம் — தாளம்: ஆதி

பண்: முல்லைப்பண் — பாணி: எட்டொத்து

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ; ச, | ரிககா | கா, | காகா | ; ரிரிககப, | பகதப | கபகரி |
| அரு | மறை | மரபு | வாழ | அப்பதி | வந்து | சிந்தை |
| சரித, | ,சரி, | கா; | காகா | ;, க, தப | தச்தப | கபகரி |
| த | ரும் | உணர்வு | | ஆ ன | எல் | லாம் |
| சாகத | பகரீ | சா,த | ரிசதா | ,சரி, காகா | பா; | பாபா |
| தம் | பிரான் | கழல் | | மேல் சா | ர | |
| ; பத | ச்தபக | பத,ச் | ;சா | ச்ரீக் ரீசர் | ச்தரிச் | தபதா |
| வரு | நெறி | மாறா அன்பு | | வளர்ந்து எழ | வளர்ந்து வாய்மைப் | |
| ; தரி | ,ச்சர் | ச்தரிச் தபகா | | பதசா ;கப | தச்தப | கரிசா |
| பொருள் பேறு | | வேத நீதிக் | | கலை உணர் | பொலிவின் | மிக்கார் |

**15.**

சீர்வளர் சிறப்பின் மிக்க
    செயல்முறை ஒழுக்கம் குன்றார்
நார்வளர் சிந்தை வாய்மை
    நன்மையார் மன்னி வாழும்
பார்வளர் புகழின் மிக்க
    பழம்பதி மதிதோய் நெற்றிக்
கார்வளர் சிகரமாடக்
    காம்பிலி என்பது ஆகும் (பா.4197)

இராகம்: பௌளி தாளம்: ஆதி

பண்: நோதிறம் பாணி: எட்டொத்து

;சரி ,ககா பாபா தாபா ;கப, தப, பாபா தபகா
சீர் வளர் சிறப்பின் மிக்க செயல் முறை ஒழுக்கம்குன்றார்
; கப ,தப, காபா கரிசா ;சரி, கா, பாதா பா;
நார் வளர் சிந்தை வாய்மை நன் மையார் மன்னி வாழும்
;பக ,பத, ச்ாசா ச்ா; ;சா ;ச்ா ச்நிதா தாபா
பார் வளர் புகழின் மிக்க பழம் பதி மதிதோய்நெற்றி
;பத ,ச்சா ச்நிதா தாபா ;கப , தபா காபா கரிசா
கார் வளர் சிகர மாடக் காம் பிலி என்பது ஆகும்

# 16.

அரிவையர் தெருவில் நடம்பயில்
அணிகிளர் தளிர்அடி தங்கிய
பரிபுர ஒலிகள் கிளர்ந்தன
பணைமுரசு ஒலிகள் பரந்தன
சுரிவளை நிரைகள் முரன்றன
துணைவர்கள் இருவரும் வந்துஅணி
விரிதருபவன நெடுங்கடை
விறல்மத கரியின் இழிந்தனர்

(பாடல் 4257)

இராகம்: ஆனந்தப்பைரவி — தாளம்: ஆதி

பண்: சாளரபாணி — பாணி: எட்டொத்து

| | | | | |
|---|---|---|---|---|
| கமபப | பபபப | பா,ப பா; | கம பம பம கரி | கா, க கா; |
| அரிவையர் | தெருவில் | நடம் பயில் | அணி கிளர் தளிர் அடி | தங் கிய |
| கமபம | பமகரி | சா,நி நீ; | சசா, கரிசா | கமபம கரிசா |
| பரிபுர | ஒலிகள் | கிளர்ந் தன | பணை முரசு | ஒலிகள் |
| பரந்தன | | | | |
| பநிபம | பஸ்ஸ்ஸ் | ஸ்ம்க்ரி ஸ்ா; | பஸ்ஸநி நிதபம | கமபம கரிகா |
| சுரிவளை | நிரைகள் | முரன்ற ன | துணைவர்கள் இருவரும் | வந்து அணி |
| பஸ்ஸ்ஸ் | நிதபா | பபாம கரிகா | கமபம பமகரி | ஸமகரி ஸஸஸஸ |
| விரிதரு | பவன | நெடுங் கடை | விறல் மத | கரியின் இழிந்தனர் |

**17.**

மன்றல் அம்தரு மிடைந்த பூங்
கயிலையில் மலை வல்லியுடன் கூட
வென்றி வெள்விடைப் பாகர்தாம்
வீற்றிருந்து அருளிய பொழுதின் கண்
ஒன்று சிந்தைநம் ஊரனை
உம்பர் வெள்ளானையின் உடன்ஏற்றிச்
சென்று கொண்டு இங்கு வாரும் என்று
அயன்முதல் தேவர்கட்கு அருள்செய்தார்
(பா. 4264)

இராகம்: பந்துவராளி தாளம்: ரூபகம்
பண்: நட்டராகம் (சாதாரி) பாணி: ஆறொத்து

| | | | | |
|---|---|---|---|---|
| பமகரி | ;சரி | ,கரீ | கா; ; ; | க, ம, |
| மன்றல் | அம் | தரு | மிடைந்த | பூங் |
| பா,ப | ;பம, | பத, | தபப, ; ; | ; ; |
| கயிலையில் | மலை | வல் | லியுடன் கூட | |
| தநிமத | ; நிச் | , தநி, | ச், ; | ; ; தாநீ |
| வென்றி | வெள் | விடைப் | பாகர் | தாம் |
| நிரிச்நிந | தபபத | பமகரி | சா; ; ; | ; ; |
| வீற் | றிருந்து அருளிய | | பொழுதின் கண் | |

| | | | |
|---|---|---|---|
| பமகரி | ;சரி | ,கரீ | கா; ; ; க, ம, |
| ஒன்று | சிந் | தை | நம் ஊரனை |
| பா, ப | ;பம | ,பத | தபப, ; ; ; ; |
| உம்பர் | வெள் | ளானையின் | உடன் ஏற்றிச் |
| தநிமத | ;நிச் | ,தநி, | ச்,; சர்சர் தாநீ |
| சென்று | கொண் | டு | இங்கு வாரும் என்று |
| நிரிச்நி | தபபத | பமகரி | சா ; ; ; ; ; |
| அயன்முதல் | தேவர்கட்கு | அருள் | செய்தார் |

**18.**

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்று உளார் அடியார் அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம் (பா. 4286)

இராகம்: மத்யமாவதி தாளம்: ஏகம்

பண்: செந்துருத்தி பாணி: நாலொத்து

| | | | |
|---|---|---|---|
| ரீ ரீ | ரீ ரீ | ரிமபம | ரிமரிஸ |
| என்றும் | இன்பம் | பெருகும் | இயல்பினால் |
| நீரிச | ,நிபா | பாரிச | ரீ ரீ |
| ஒன்று | காதலித்து | உள்ளமும் | ஓங்கிட |
| ரிமபநி | நீ நீ | ப நீ, | சர்சர் |
| மன்று | உளார்அ | டியார்அவர் | வான்புகழ் |
| சர்சர் | ச்நிபம | பநிபம | ரிமரிச |
| நின்றது | எங்கும் | நிலவி | உலகெலாம் |

# முடிவுரை

**பெரியபுராணம்** என்பது ஒரு பெரிய கடல். இதில், 63 நாயன்மார்களின் வரலாற்றினை மட்டுமின்றி, தொகை அடியார்களின் வரலாறுகளையும் சேக்கிழார் விவரித்துள்ளார். அடியார்களின் வரலாறுகளை எடுத்துரைப்பதே கடினமான ஒரு செயலாகும். அவ்வாறு எடுத்துரைக்கும்போது, இசை மற்றும் இசைக் கருவிகளைப் பற்றிய செய்திகளையும் சேக்கிழார் மிக அழகாக எடுத்தியம்பியுள்ளார்.

மிகவும் நுட்பமான முறையில் கோவில்களில் ஒலிக்கப்படுவதாகச் சங்கு, சின்னம், காளம் போன்றவற்றைப் பற்றிய செய்திகளையும், போர்க் காலங்களில் முழங்கியதாக முரசு போன்ற இசைக் கருவிகளைப் பற்றிய செய்திகளையும் நமக்கு வழங்கியுள்ளார்.

ஆனாய நாயனார் குழல் வித்தகராக இருந்தமையால் அவர் வாழ்க்கை வரலாற்றை எடுத்தியம்பும்போது, வங்கியத்தை உருவாக்குவதிலிருந்து நன்கு இசைப்பது வரை பல செய்திகளை நமக்குச் சேக்கிழார் கூறுகிறார். அதேபோல் திருநீலகண்ட யாழ்ப்பாணர் **யாழிசையில்** வல்லவர் என்பதால் அவரைப் பற்றிப் பகரும்போதெல்லாம் யாழினைச் சுருதி கூட்டுவது பற்றியும் இசைப்பது பற்றியும் விளக்கமாகக் கூறுகிறார்.

சிவன் இசைத்தாக டமருகத்தையும் அவர் பாதத்தில் அணிந்ததால் எவ்வாறு சிலம்பு அலம்பியது என்பதனையும் சேக்கிழார் கூறுகிறார்.

திருமண விழாக்களில் பல்லியங்கள் இயம்பின என்று பல்வேறு இடங்களில் கூறியுள்ளார்.

பண்ணார்ந்த தமிழ் பற்றிப் பல இடங்களில் சேக்கிழார் கூறுகிறார். பண் நிறைந்த பாடல்கள்தாம் பாடப்பட்டன என்று அவர் கூறுகிறார். மேலும் கொடிப்பாலை, இந்தளம், புறநீர்மை, முல்லை, செந்துருத்தி, போன்ற பண்களைப் பற்றி அவர் கூறியுள்ளார்.

மூவர் இசைத்த தேவாரங்கள் அனைத்தும் இசைப் பாடல்களே என்று பல பாடல்களில் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். "பதிகம்பாடி", "திருப்பதிகம் பாடி", "திருப்பாட்டு", "பாடல்" போன்ற சொற்கள் ஞானசம்பந்தர், சுந்தரர், அப்பர் போன்றோரின் வாழ்க்கை வரலாற்றில் அடிக்கடி இடம்பெறுகின்றன.

மேற்கூறிய அனைத்தும் சேக்கிழாரின் இசைப்புலமையைப் பறைசாற்றுவதால் சேக்கிழாரை நாம் ஓர் "இசைப் புலவர்" என்று கொள்ளலாம்.

**வாழ்க சேக்கிழார் !**

**வளர்க அவரது இசைத் தொண்டு !**

**வாழ்க தமிழிசை !**

# துணைநூல்கள்


1. அ.ச. ஞானசம்பந்தன், **சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம்**

2. நாவலர், **சிலப்பதிகாரம் – 3 பாகங்கள் , ந.மு. வேங்கடசாமி நாட்டார் உரை**

3. **திருஞானசம்பந்த சுவாமிகளின் தேவாரம்**, திருப்பனந்தாள் மடம் பதிப்பு

4. P. Sambamurti, **South Indian Music – Part I to VI**

5. P. Sambamurti, **A Dictionary of South Indian Music and Musicians – Vol. I to III**

# பின்னிணைப்பு


சேக்கிழார்


முரசு


முரசு


குழல்


தாரை


குழல்


யாழ்


யாழ்


வில்யாழ்


யாழ்


யாழ்


யாழ்

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113.

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாகூதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| கம்பன் களஞ்சியம் | 280.00 |
| மொழியியல் நோக்கில் தொல்காப்பிய சங்க இலக்கிய ஆய்வுகள் | 40.00 |
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்று காதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| இந்தியச் சூழலில்மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் கண்ணோட்டம் | 60.00 |
| பழந்தமிழ் அறிவியல் | 45.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-1 | 100.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-2 | 100.00 |
| நீறணி பவளக் குன்றம் (ஒன்பதாம் திருமுறை ஆய்வுநூல்) | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்மூலம்-ஒருசமூகவியல் பார்வை | 30.00 |
| இந்தி நாடகப் பனுவல் (ஆடி மாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையாரின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் - ஓர் ஆய்வு | 40.00 |
| சொல்லாடல்கள் | 75.00 |

731 சேக்கிழாரும் இசைத்தமிழும் 50.00